

உ

மகா கணபதி சகாயம்

ஓம் நமோ மகா தேவாய;

# சிவ சின்ன மாட்சிமை

ஏ.ஆர்.இராமசாமி

(முதுநிலை கணக்காய்வு அதிகாரி (ஓய்வு)

தமிழ் மாநில கணக்காயர் அலுவலகம்,

சென்னை-18.

வெளியிடுவோர்:

**சுந்தரம் - சரஸ்வதி பவுண்டேஷன் டிரஸ்ட்**

ஓம் நமசிவாய பிரார்த்தனைக் கோபுரம்

2/13, தெய்வசிகாமணி தெரு,

பள்ளிக்கரணை, சென்னை-600 100

தொலைபேசி: 22461811, செல்: 93801 11440, 99628 67895

# நூல் விவரப்பட்டியல்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சிவ சின்ன மாட்சிமை |
| ஆசிரியர் | : | ஏ.ஆர். இராமசாமி<br>14, பாலகிருஷ்ணா தெரு<br>மயிலாப்பூர், சென்னை 600 004<br>தொலைபேசி: 91 044 24984990 |
| பொருள் | : | ஆய்வு |
| நூலின் வகை | : | சைவ விளக்கம் |
| முதல் பதிப்பு | : | ஜூன், 2014 |
| மொத்தப் பக்கங்கள் | : | 112 |
| தாள் | : | 11.6 கி.கி. மேப்லித்தோ |
| புள்ளி | : | 12 |
| கட்டுமானம் | : | சாதா அட்டை பைண்டிங் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியீடுவோர் | : | சுந்தரம் & சரஸ்வதி பவுண்டேஷன் டிரஸ்ட்<br>ஓம் நமசிவாய பிரார்த்தனை கோபுரம்<br>2/13, தெய்வசிகாமணி தெரு,<br>பள்ளிக்கரணை, சென்னை-600 100<br>தொலைபேசி: 22461811<br>செல்: 93801 11440, 99628 67895 |
| விலை | : | ரூ.60.00 |
| ஒளிஅச்சு | : | A. நவநீதகிருஷ்ணன் |
| அச்சிட்டோர் | : | சிவம் பிரிண்டர்ஸ், சென்னை 18 |





சிவனருட் செல்வர்

**தானப்பசுந்தரம்,**

நிறுவனர், ஓம் நமசிவாய பிரார்த்தனை கோபுரம்,
காஞ்சி மாவட்ட பா.ஜ.க., அறநிலையத்
துறைத் தலைவர்,
பள்ளிக்கரணை, சென்னை-600 100.
போன்: 044-3247 6202
மொபைல்: 93801-11440 | 98408-08961.


# வாழ்த்துரை

'அன்பே சிவம்' என்பதை, 'ருத்திராட்சம்' ருத்ரனின் கண்கள் என்று பொருள். 'ருத்' என்றால் துன்பம், வேதனை, கொடுமை; 'ரன்' என்றால் ஓடுதல், ஓட்டிவிடுதல். அதாவது, துன்பத்தை ஓட்டி விடுவது என்று பொருள்'' என்ற வரிகளில் மிகவும் அழகாகவும், அருமையாகவும் விளக்குகிறார் நூலாசிரியர்.

'அனைத்தும் சிவமயம்' என்பதை ஆசிரியர் சிவச் சின்னமாகிய இளம்பிறையை விளக்கும்போது நன்கு உணர முடியும்.

"மேலை நாடுகளிலும் மத்திய கிழக்கு நாடுகளிலும் பிறையைப் புனிதமாகக் கருதி போற்றினார்கள்."

"அமெரிக்க ராணுவத்திற்கு சொந்தமான உணவுப் பார்சல் பெட்டிகளின் மேல் பிறைச் சின்னத்தை ஒட்டுகிறார்கள்."

"துருக்கியர்கள் பிறைச் சின்னத்தை தங்கள் பேரரசின் அதிகாரச் சின்னமாக வைத்துக் கொண்டார்கள்."

இவ்வாறெல்லாம் பல்வேறு வரலாற்றுச் சான்றுகளை இந்நூலில் ஆசிரியர் எடுத்துக் கூறி, அவரே மேலும்

"உலகனைத்திலும் பிறை வளம் தந்து, அருள் பாலிப்பதாகவும், புனிதமாகவும் கருதப்படுகிறது. தெரிந்தோ தெரியமலோ சிவன் போற்றப்படுகிறார். உலகம் சிவமயம் என்பதற்கு இதுவே சான்று," என்று ஆணித்தரமாக, அறிவுப்பூர்வமாக கூறுவது சிவனடியார்களுக்கு மேலும் மேலும் அறிவை, ஆற்றலை, பக்தியை வளர்க்கும் நல்விளக்கமாகும்.

சிவ சின்னம், உடுக்கை ஒலியின் விளக்கமாக, "ஒலியும் ஒளியும் அனைத்தும் பிரபஞ்சமாகிற சிவபெருமானிட மிருந்தே வெளிப்படுகின்றன" என்று கூறும் ஆசிரியர், உலகப் படைப்பு 51 அட்சரங்களிலிருந்து உண்டாகியதையும் சிதம்பர நடராஜரின் நடனமும், இந்த 51 அடசரங்களின் அடிப்படையில் அமைந்ததே என்பதையும், தமிழ் சிவனின் மொழி என்பதையும் பல்வேறு காரண காரியங்களால், ஆய்வு மனப்பான்மையால் பறைசாற்றும் பாங்கு தமிழ் கூறும் நல்லுலகுக்கே – சைவ நெறிக்கே – வாழ்த்தும் பாராட்டும் ஆகும்.

மேலும் எல்லா சிவ சின்னங்களின் அருமை, பெருமைகளை, அது காட்டும் வாழ்வியல் கூறுகளை மிகவும் தெளிவாக ஆசிரியர் சிவத்திரு ஏ.ஆர்.இராமசாமி அவர்கள் அவருக்கே உரிய பண்புடன், பக்தியுடன் பணிவுடன் பொருளுடன் இந்நூலில் சிவ சின்ன மாட்சிமை – விளக்குகிறார்.

அவர் மேலும் மேலும் சிவனருள் பெற்று மேலும் மேலும் சிறப்புற சிவத் தொண்டாற்றி, சிவநெறி பரப்ப, எல்லாம் வல்ல, எல்லாம் ஆன, சிவபெருமானை வேண்டிப் பிரார்த்திக்கிறோம்.

(ஒப்பம்)

தேதி: 28.06.2013 எஸ்.தானப்ப சுந்தரம்



**குருமகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சுவாமி தமிழ்ப்பித்த ஆதீனம்**

M.A.(Phi); M.A. (Theo); M.A. (Psy); A.M.I.E; Ph.D(Phi); Ph.D(Theo); Ph.D(Psy); Ph.D(Pa.Psy); Ph.D(P&R); Ph.D(P&T); Ph.D(T&R); P.G.D(Ch.P; I.P; B.P'Ja.P; Con.P; Je.P; F.P; M.P; L.P;Pa.Psy; W.P.E.P; V.P; Sik.P); S.D.

கொளிஞ்சிவாடி P.O., தாராபுரம் TK., திருப்பூர் DT., - 638 673

Ph: 04258-222340. Cell: 98425-78412, 97894-30253, 9445787680, 94868-32340.

Website: www.tamilatinam.com. Email: tamilatinam@gmail.com

# வாழ்த்துரை

சமய உண்மைகளைச் சரியாகப் புரிந்து கொண்டால் எல்லோரும் சந்தோசமாக வாழ முடியும்.

அதற்கு 'சிவ சின்ன மாட்சிமை' என்ற இந்நூல் மிகவும் பயன்படும்.

இந்நூல் ஆசிரியர் சிவத்திரு. ஏ.ஆர்.இராமசாமி அவர்கள் மிகவும் சிறந்த ஞானி, இவர் எழுதிய 'சோதனைகளை வென்ற சைவம்' என்ற நூல் ஏற்கனவே சாதனை படைத்துள்ளது.

உருவமில்லா இறைவனின் உருவம் பெற்ற தத்துவத்தை, திருவிளையாடல் தத்துவத்தை இந்நூலின் முகவுரையிலேயே மிகவும் அருமையாக விளக்குகிறார்.

விபூதியின் மகிமை கூறி "உடல் முழுவதும் திருநீறு பூசிக் கொண்டால் சரீரத்திற்கு இதத்தைத் தந்து, துர்நாற்றத்தையும் போக்கி நறுமணம் வீசும்," என்று கூறும் யதார்த்த, விஞ்ஞான, அறிவார்ந்த நிலை மிக மிக சீரியது.

விபூதியின் மருத்துவ குணம் கூறியும், ஜலதோஷம் நீக்கும் சிறப்பையும் விளக்குகிறார்.

ருத்ராட்சத்தின் பெருமை கூறி, 1 முகம் முதல் 14 முகம் வரை உத்திராட்சங்களுக்கு விளக்கம் கூறுவது ஒரு தனி நூல் போலவே உள்ளது.

அதன் மூலிகைக் குணத்தை "ருத்திராட்சத்தை கல்லில் உரைத்து சாப்பிட்டு வர...... ECG, Echo எடுக்கும்போது ருத்திராட்ச மாலையை எடுத்து விடச் சொல்கிறார்கள்," என்று விளக்கமாக கூறி அறிவுப்பூர்வமாக நிறுவுகிறார்.

சிவ சின்னம் திரிசூலம் வெளிநாடுகளிலும் பரவியுள்ள நிலை கூறி அது யோகநெறியில் உடலில் செயல்படும் விதத்தையும் தெளிவாக விளக்குகிறார்.

சூரியன் சிவனின் வலது கண். இடது கண் சந்திரன். காதுகளில் உள்ள தோடுகளிலிருந்து ஒளிக்கதிர்கள் கண்களுக்கு வருகின்றன என்பதையும் அதன் தத்துவ விளக்கத்தையும் கூறும் ஆசிரியர் ஞானம் மிக மிக அருமை.

புலித்தோல் ஆசையை அடக்க வேண்டும் என்பதையும், முயலகன் அறியாமையை அகற்ற வேண்டும் என்பதையும் விளக்குகின்றன என்று கூறி வாழ்வியல் தத்துவங்களை நிறுவுகிறார்.

வில்வத்தின் மகிமை கூறி மரம் முழுவதுமே மருத்துவ குணம் உடையது என்பதையும் தெளிவாக, விரிவாக விளக்குகிறார். இப்படி அனைத்து சிவ சின்னங்களையும் அறிவுப்பூர்வமாக விளக்குகிறார்.

இச்சீரிய நூலை தந்தருளிய ஆசிரியர் மேலும் மேலும் நூல் பல தந்து உலகிற்கே வழிகாட்ட வாழ்த்தும் பாராட்டும்.

ஒப்பம்

24.06.2013, (சுவாமி தமிழ்ப் பித்த ஆதீனம்)

## பொருளடக்கம்

உ
சிவமயம்

# முகவுரை

ஐஸ்வர்யமான ஈஸ்வரனுக்கு உருவமுமில்லை, பெயருமில்லை என நமது சைவ சித்தாந்தம் பறை சாற்றுகிறது.

ஆனாலும், அவன்பால் உள்ள பக்தி மேலீட்டால், அவனுக்கு ஆயிரம் உருவங்களைக் கொடுக்கிறோம். பெயரிலாப் பெருமானுக்கு ஆயிரம் திருநாமங்களை அளித்து, அவர் புகழ் பாடி பரவசமடைந்து, ஆனந்தம் அடைகிறோம்.

நாம் அனுபவிப்பது போல் அவரும் இல்லறம் அனுபவிக்க வேண்டும், அவரும் உண்ண வேண்டும் எனப் பலவிதமாக ஆர்வத்துடன் செயல்படுகிறோம். காம இச்சைகளுக்கு அப்பாற்பட்டவரான சிவனார், ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழிலையும் புரிபவராகவும் அனைத்து பிரபஞ்சங்களுக்கும் முதலாளியாக அவரே இருப்பவராகவும் உணர்ந்து போற்றிப் பாடுகிறோம்.

அவரின் செயல்பாட்டிற்கு ஏற்ப அவர் பலவிதமாகத் தோற்றமளிப்பவராகவும், அதற்குத் தகுந்தாற்போல் பல உருவங்களையும், ஆடைகளையும், ஆயுதங்களையும், ஆபரணங்களையும், அணிபவராகச் சித்தரித்து அவரின் இயக்கத்தையும், அருள்பாலித் தலையும் போற்றி, வணங்கிப் பெருமிதமடைகிறோம்.



அவர் நிகழ்த்திய திருவிளையாடல்களையும், ஜீவன்களைக் காப்பாற்றுவதற்காக அவர் தரித்த ஆயுதங்களையும், செய்த வீரச் செயல்களையும் கண்டுணர்ந்து பூரிப்படைகிறோம். அவரின் ஆடைகளையும், அணிகலன்களையும், ஆயுதங்களையும் அவரின் சின்னமாக, அவரேயாகவும் எண்ணி வணங்குகிறோம்.

சிவபெருமானின் சின்னங்கள் ஏற்பட்ட விதம் பற்றியும், அவற்றின் காரண, காரியங்களையும், புனிதத்தன்மையைப் பற்றியும், பல ஆதாரங்களிலிருந்து திரட்டி, இந்நூலில் விளக்கியுள்ளேன்.

சிவனாரின் பெருமையை, சிவ மகா புராணம், சிவரகசியம், தேவி பாகவதம், காஞ்சி மாமுனிவர் ஆற்றிய அருளுரைகளின் தொகுப்பான தெய்வத்தின் குரல், இராமகிருஷ்ண மடத்தின் புனிதர்கள் எழுதிய ஹிந்து என்சைக்ளோபீடியா, புராணங்களின் என்சைக்ளோபீடியா என்ற பல நூல்களைப் படித்து, ஆதாரங்களைத் திரட்டி எழுதியுள்ளேன். இந்நூலாசிரியர்களுக்கும், அவைகளின் வெளியீட்டாளர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றி.

சிவபெருமான் ஒருவரே அனைத்துப் பிரபஞ்சங் களுக்கும், அதில் புழக்கத்திலிருக்கும் சகல மதங்களுக்கும், தலைவராக, ஈசனாக விளங்குகிறார்.

சிவபெருமானை விட வேறெந்த தெய்வமுமில்லை. அவரையே பல மதத்தினரும் பல பெயர்களில், பலவாறாகப் போற்றி வழிபடுகிறார்கள். “சிவாத்பரம்

நாஸ்தி" என்ற சொலவடை உண்மையென இந்நூலின் மூலம் விளக்கப்படுகிறது.

உலகம் சிவமயம், பிரபஞ்சம் சிவமயம்
சிவபரத்துவம் சத்தியம்.

கல்லாப் பிழையும்; கருதாப்பிழையும், கசிந்துருகி
நில்லாப் பிழையும், நினையாப் பிழையும் நின்
ஐந்தெழுத்தைச்
சொல்லாப் பிழையும், துதியாப் பிழையும், தொழாப்
பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய்
கச்சியேகம்பனே!

திருச்சிற்றம்பலம், சிவசிதம்பரம்!

**ஆ.ரா.ராமசாமி**

உ
மகா கணபதி துணை
சிவமயம்

# 1. விபூதியின் மாட்சிமை

சமஸ்கிருத மொழியில் விபூதி என்றால் ஐஸ்வர்யம் என்று பொருள். 'பூதி' என்றால் ஐஸ்வர்யம். 'வி' என்ற அடைமொழி மிகவும் உயர்ந்த, மதிப்பு வாய்ந்த, வெற்றி என்ற பொருளில் குறிக்கப்படும்.

புனிதமான முறையில், வேத சாஸ்திர விதிகளின்படி தயாரிக்கப்பட்ட சாம்பல் விபூதி என்று பொருள்படும். இதற்கு பஸ்மம் என்று பெயர்.



விபூதி பூதிரைஸ்வர்யம் என்று சமஸ்கிருத அமர கோசம் (டிக்ஷனரி) அர்த்தம் சொல்கிறது. அதாவது விபூதி என்பதும் ஐஸ்வர்யம் என்பதும் ஒரே பொருள் தரும். திருநீற்றுப் பதிகம் "பாக்கியமாவது நீறு" என்று கூறுகிறது. ஐஸ்வர்யம் என்ற வார்த்தை ஈஸ்வரன் என்ற வார்த்தையிலிருந்து வந்தது தான். என்றும், எந்நிலையிலும், அழியாதது பஸ்மம். சிருஷ்டிக்கப்பட்ட அனைத்து தாவர, ஜங்கம, ஜீவன்களும் முழுமையாக எரிந்து அழிந்து விட்ட நிலையிலும், அவைகள்

சாம்பலாக எஞ்சி நிலைத்து நிற்கும். அஸ்தி என்றால் முடிவாக எஞ்சியிருப்பது என்று அர்த்தம்.

அனைத்து தோற்றங்களும் மாயையின் வெளிப் பாடே! ஒரு பெண் இளமைப் பூரிப்புடன், அனைத்து அழகுடனும், அங்க நேர்த்தியுடனும் கவர்ச்சியாக தோற்றமளிக்கிறாள். ஆனால், அவளின் உருவத்தில் உள்ள மாமிசங்களையும், முடிகளையும் வழித்து நீக்கிவிட்டால், வெறும் எலும்புக் கூடாகத் தான் கட்சியளிப்பாள். அவளை அந்நிலையில் காணுற்றால், "ஐயோ! பிசாசு, பேய்" என்று அலறி அடித்துக் கொண்டு ஓடிவிடுவார்கள். அவளுடைய அழகு என்ற மாயை விலகி விடுகிறது. அவளுடைய எலும்புக் கூட்டை எரித்தால் எஞ்சியிருப்பது (அஸ்தி) வெறும் ஒரு பிடி சாம்பலே! இதே நிலைதான், மனிதன், மரம், செடி, கொடி, மலை எல்லாவற்றிற்கும்.

அதர்வசிரஸ் உபநிஷத்தில் உள்ள மந்திரத்தில் சாம்பலே அக்னி, சாம்பலே மனம், சாம்பலே வாயு, சாம்பலே ஆகாயம், சாம்பலே கண்கள் எனக் கூறப்பட்டிருக்கிறது. இந்த மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே உடல் முழுவதும் திருநீரை அணிய வேண்டும்.

மகா பிரளய காலத்தில் இப்பூவுலகே எரிந்து சாம்பலாகி பிரபஞ்சத்தில் படர்ந்துவிடும். பிரபஞ்சமே சிவனாரின் திருமேனி, எரிந்துவிட்ட அனைத்து ஜீவன்களின் ஆத்மா, பிரபஞ்சமான சிவனின் திருமேனியில் ஐக்கியமாகிவிடும். அதாவது அவைகள் பிறந்த வீட்டிற்கே திரும்பிவிடும். இந்தத் துகள்கள் தான் மனித சக்திக்கு அப்பாற்பட்டதென்றும் ஐஸ்வர்யங்கள் என்றும் பலவாறாக விளக்கப்படுகிறது.



இதைத் தான் இந்து என்சைக்ளோபீடியாவில், ஜீவன்கள் சம்ஸ்காரத்தினால் சிவனில் உறங்குகின்ற என்றும், மறுபடியும் சிருஷ்டி துவங்கும்போது, சிவனிலிருந்து வெளிப்படுகின்றனவென்றும் கூறப்பட்டிருக்கிறது.

ஞானிகள் ஏன் விபூதியை உடல் முழுவதும் பூசிக் கொள்கிறார்கள்? மாயையின் வயப்பட்டு, சுயநலத்திலும், நிலையற்ற உலக சுகபோகங்களிலும் ஈடுபட்டு வாழ்க்கையை வீண்டித்துக் கொள்ள வேண்டாம் என நினைவுறுத்தவே, விபூதியை அணி கிறார்கள். இதைத் தான் மன்மத தகனம் விளக்குகிறது. சிவபெருமான் பிரபஞ்ச இயக்கத்தையும், அதன் நலனைப் பற்றியும் தியானித்துக் கொண்டிருக்கையில், அவரின் தியானத்தை கெடுப்பதற்காக ஆசை (காமம்)யின் உருவகமான காமன் (மன்மதன், விஷ்ணுவின் மகன்) அவர் மீது காமக் கணைகளை ஏவினான். சிவபெருமான் அவனை எரித்துச் சாம்பலாக்கினார். காமங்கள் நிலையற்றவை.

எதனால் நம் அறியாமையும், பாவங்களும் அழிக்கப்படுகின்றனவோ, எதனால் நாம் இறைவனை நினைவுபடுத்திக் கொள்கிறோமோ அதுவே பஸ்மம்.

ஹோமத்தில் இட்ட கட்டைகள் முழுவதும் எரிந்து விட்ட நிலையில் எது மேலும் அழியாத நிலையில் எஞ்சி இருக்கிறதோ அதுவே பஸ்மம். பிரபஞ்சத்தில்

சிருஷ்டிக்கப்பட்ட அனைத்தும் அழிந்துவிட்ட நிலையில் எஞ்சி நிலைக்கும் உண்மையே சிவன்.

விபூதி ஈசனின் அசாதாரண, எல்லையற்ற சக்தியையும், சித்தர்கள் மற்றும் யோகிகளின் சாம்யமா செயல்களால் அடையும் சக்தியையும் குறிக்கிறது. இது புலனடைக்கத்தை தருகிறது.

சாம்யமா என்பது விபூதி தரித்ததாலும், தியானம் செய்வதாலும் கிடைக்கும் சமாதி நிலைக்குப் பெயர்.

பகவத் கீதை 10வது அத்தியாயம் விபூதி யோகம். பதஞ்சலி முனிவரின் யோக சூத்திரத்தின் 3வது அத்யாயம் 'விபூதி பாடம்.' ஒரு யோகி அவர் விருப்பப்படி, பல பொருட்கள் மீது கவனம் செலுத்தி தியானம் செய்யப் பழகுவது சாம்யமா. அதனால், அவர் பிரத்யேக ஆன்ம சக்திகளைப் பெறுகிறார்.

ஜபாலோபநிஷத் விபூதியின் மகத்துவத்தை ஈசனே சொல்வது போல் விளக்குகிறது. சிவன் கூறுவதாக உள்ள பஸ்மம்: "எது ஒளிர்மயமாக பிரகாசிக்கிறதோ, எது பாவங்களை அழிக்கிறதோ, எது தூய்மையான வர்களை உண்டாக்குகிறதோ அதுவே விபூதி." அக்னி அனைத்து வஸ்துக்களையும் அவைகளின் ஆரம்ப தூய்மையான நிலைக்கே திருப்பவும் கொண்டு செல்கிறது.

வேத உச்சாடனத்துடன் செய்யப்பட்ட வேள்வித் தீயிலிருந்து எடுக்கப்பட்ட பஸ்மம் சுரௌத பஸ்மம், ஸ்மார்த்த பஸ்மம் எனவும் கூறப்படுகிறது.



வேள்வித் தீயை அகோர மந்திர உச்சாடனத்துடன் (சாந்த சொரூபியாக சிவனை வர்ணிக்கும் மந்திரம்) வில்வ மரக் கட்டையால் கிளறினால் கிடைக்கும் பஸ்மம் "சிவாக்னி பஸ்மம்". இது மிகவும் புனிதமானதாகவும், அனைத்து பாவங்களையும், சடங்கில் ஏற்பட்ட குறைபாடுகளையும் அழிக்க வல்லது.

விபூதியை நெற்றியிலும், மற்ற உடல் பாகங்கள் அனைத்திலும், அதற்கென விதிக்கப்பட்ட மந்திர உச்சாடனத்துடன் பூசிக் கொள்வதற்கு விபூதி ஸ்நானம் (அ) குளியல் என்று பெயர்.

தீவிர சைவர்களான லிங்காயத்துக்கள், அஷ்டா வர்ண அடிப்படையில் விபூதியை நெற்றியில் திரிபுண்டரமாக பூசிக் கொள்வது மிகவும் முக்கியமானதாகக் கருதுகிறார்கள். அவர்களின் சிந்தாந்தத்தின்படி எது எல்லா மாயைகளையும் எரித்து விடுகிறதோ, எது ஆத்ம ஞானத்தை அடைய வழிகோலுகிறதோ அதுவே விபூதி.

விரும்பத்தகாதவர்களையோ (அ) பாவிகளையோ, மிருகங்களையோ தொட்டதினால் ஆன அபச்சாரத்தை கங்கை நீர் போல் விபூதியும் நீக்கி தூய்மைப் படுத்துகிறது. அமங்கலமான வஸ்துக்கள் மற்றும் தீய ஆவிகளிலிருந்தும் பில்லி, சூனியம், ஏவல்களிலிருந்தும் காப்பாற்றும் வல்லமை படைத்தது.

அதர்வண வேதத்தைச் சார்ந்த பல சிறிய உபநிஷத்துகளில், பஸ்ம ஜபாலோபநிஷத் ஒன்றாகும். இது ஜபாலமுனிவர்க்கும் சிவபெருமானுக்கும் இடையே

நடந்த உரையாடலாக இரண்டு அத்தியாயங்களில் உரைநடையில் உள்ளது. ஜபால முனிவர் சிவபெருமானிடம், விபூதியின் மகத்துவத்தைப் பற்றியும் அதை அணியும் முறை பற்றியும், அப்படி நெற்றியில் அணிவதின் மூலம் மோட்சம் அடைவதற்கான உபாயத்தையும், பிராமணர்களின் நித்யகர்மானுஷ்ட மான கடமைகளைப் பற்றியும் உபதேசிக்குமாறு பிரார்த்தித்தார்.

சிவபெருமான் உபதேசித்து அருளியது:-

"சூர்யோதயத்திற்கு முன் பசுவின் சாணத்தை எடுத்து பலா இலையில் வைத்து, சூரிய ஒளியில் நன்றாகக் காய வைக்க வேண்டும். கிருஹ்ய அக்னியில் அதையும், எள்ளையும் நெய்யில் தோய்த்த நெல்லையும் "த்ரயம்பகம் யஜாமஹே" என்ற மிருத்யுஞ்சய மகா மந்திரத்தையும், "சோமாய ஸ்வாஹா" என்கிற மந்திர உச்சாடனத்துடன் முறையாக இட வேண்டும். அந்தக் காய்ந்த சாணம் எரிந்து கொண்டிருக்கும்போது, காயத்ரி மகாமந்திரத்தை ஓதிக் கொண்டே இருக்க வேண்டும். நன்றாக எரிந்து சாம்பலானவுடன் அதை தங்கம் (அ) வெள்ளி (அ) மண்பாண்டத்தில் சேகரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த விபூதியை சரீரத்தின் அனைத்து பாகங்களிலும், அதாவது சிரம், நெற்றி, காது, கழுத்து, கைகள், மார்பு மற்றும் தொப்புள் முதலிய உறுப்புகளின் மீது விதிக்கப்பட்ட மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே பூசிக் கொள்ள வேண்டும். இவ்விதம் திருநீற்றைத் தரித்துக் கொள்வது பிராமணனின் புனிதமான, கட்டாயமான கடமையாகும். இதை அவன் செய்யத் தவறினால் பாவம் செய்தவனாவான். இதற்கு பிராயச்சித்தமாக பட்டினியுடன், தண்ணீரில் நின்று கொண்டு காயத்திரி ஜபம் செய்ய வேண்டும். இப்படி அவன் செய்தால் பாவங்களிலிருந்து விடுபட்டு புனித ஸ்தலங்களுக்குச் சென்ற க்ஷேத்ராடான பலனையும், நீண்ட ஆயுளையும் பெறுவான்".



சிவபெருமான் பிராமணனின் கடமையை மேலும் விவரிக்கிறார்.

நீராடுதல், சுத்தமான ஆடைகளை அணிதல், விபூதி தரித்தல், ருத்ராட்ச மாலை அணிதல் முதலியவைப் பற்றி உபதேசிக்கிறார். தினமும் மூன்று முறை சிவலிங்கத்தை அபிஷேகம் செய்து, விபூதி சாத்தி, வில்வத்துடன் அர்ச்சனை முதலியவைகளால் ஆராதித்து வணங்க வேண்டும்.

அடுத்து, ஜபால முனிவர்க்கு ஆறெழுத்து மந்திரமாகிய ''ஓம் நமச்சிவாய'' மற்றும் அஷ்டாக்ஷரமாகிய "ஓம் நமோ மஹாதேவாய" என்கிற தாரக மந்திரத்தையும் உபதேசிக்கிறார். (தாரகம் என்றால் பிறவிக்கடலைக் கடத்தல் என்று பொருள்; அதை சிவபக்தன் கடந்து முக்தி அடைதல்) இதை உச்சரித்த பின் சிவருத்ரத்தை ஓதினால் முக்தி கிட்டும்.

சிவபெருமானே சிருஷ்டி அனைத்துக்கும் காரண மாவார். அவரே ஜீவன்களை பிறவித் தளையிலிருந்து விடுவிக்கிறார். இவ்வாறு அனுஷ்டானம் செய்ய

முடியாதவர்கள் காசிக்குச் சென்று அங்கு மரண மடையும் வரை வாழ வேண்டும். காசியில் அவர்கள் வாய்மையைக் கடைப்பிடித்தும், ருத்ராட்சமும், திருநீறும் அணிந்தும் ஜோதிர்லிங்கங்களைத் தவறாமல் வணங்கியும் வாழ வேண்டும். இவ்வாறு வாழ்ந்தால் அவர்கள் நிச்சயம் துன்பங்கள், வருத்தங்கள், பாவங்களிலிருந்து விடுபட்டு முக்தி அடைவார்கள். தவறினால் அதனால் விளையும் பாவம் ஸ்ரீருத்ரம் ஜபிப்பதாலும், பட்டினியாலும் விபூதிக் குளியலாலும் நீங்கும்.

காசியில் மரிப்பவர்களின் செவியில் சிவபெருமான் ஓம் நம:சிவாய என்ற தாரக மந்திரத்தை ஓதி சம்சார சாகரத்திலிருந்து விடுவிக்கிறார். எந்த ஒரு அனுஷ்டானத்தையும் கடைப்பிடிக்காதவர்களும், அவர்கள் துன்பப்பட்டு, பாவமன்னிப்பு கோரினால், முக்தி அடைவார்கள்.

அதர்வண வேதத்தில் விபூதியைப் பற்றியும், அதைத் தரித்துக் கொள்ளும் விதம் பற்றியும் கூறப்பட்டுள்ளது.

விபூதியை தலையிலிருந்து உடல் பாகங்கள் அனைத்திலும், அந்தந்த அங்கங்களுக்கே உரித்தான மந்திரங்களுடன் பூசிக் கொள்வதற்கு சிரோவிரதம் (விபூதி ஸ்நானம்) என்று பெயர். இந்த சிரோ விரதத்தை அனுஷ்டிக்காதவர்கள் வேறு எந்த விரதத்தாலும் புண்ணிய பலன்களை அடைய முடியாது. விரதங்கள் யாவினும் இதுவே தலைபோல் இருப்பதால் இதற்கு சிரோவிரதம் எனப் பெயர்.



பசுத்தன்மையுடைய (மிருகத்தன்மையுடைய) மனிதன் இந்த சிரோவிரதத்தை குறைந்தபட்சம் மூன்று மாதங்களுக்காவாவது விதிப்படி சங்கல்பம் செய்து கொண்டு ஜபதபங்கள் செய்தால், அவன் மிருகத்தன்மையை இந்த ஜன்மத்திலேயே நிவர்த்தி செய்து பிறவா நிலையையும், சிவகதியையும் அடைவான்.

அஞ்ஞானத்தை அகற்றும் ஞான சாதனம் விபூதியேயாகும்.

எந்தவிதமான அக்னியிலிருந்து இது உண்டாக்கப் படுகிறதோ அதன் பெயரிலேயே அந்த விபூதி அழைக் கப்படும். அந்த அக்னிகள், நித்யாக்னி, விரஜாக்னி, ஔபாசனாக்னி, சமிதாக்னி, பசனாக்னி, தாவாக்னி எனப்படும்.

நித்யாக்னி விபூதி, தினமும் செய்யும் அக்னி ஹோத்திரத்தில் கிடைக்கும்.

விரஜாக்னி விபூதி நெய்யாலும், சமித்தாலும், சருகாலும் மந்திர ரூபமாக உடல் தூய்மையடைய பிரார்த்தனை செய்து கொண்டு வளர்க்கப்பட்ட அக்னியின் மூலம் சேகரிப்பது. இது நீண்ட ஆயுள், சரீர பலம், ஆரோக்யம், ஐஸ்வர்யம் முதலியவற்றை அளிக்கும்.

ஔபாசனாக்னி விபூதி என்பது ஔபாசன ஹோமத்திலிருந்து எடுப்பதாகும்.

சமிதாக்னி விபூதி பிரும்மச்சாரிகள் சமித்துக்கள்

மூலம் செய்யும் சமிதாதான ஹோமத்திலிருந்து எடுக்கப்படுவது.

பசனாக்னி விபூதி என்பது பரம்பரையாக வேதம் ஓதும் பிராமணர்களின் இல்லத்திலிருந்து எடுக்கப் படுவது.

தாவாக்னி காட்டுத் தீயினால் எரிக்கப்பட்ட கட்டைகளிலிருந்து எடுக்கப்படுவது.

விரஜாக்னி விபூதி, சாந்திகம், பௌஷ்டிகம், காமதம் என மூன்று வகைப்படும்.

பசுவின் இனக்குறியிலிருந்து நேரடியாக கையை விட்டு எடுத்து, நன்றாகக் காய வைத்து, 'திரயம் பகம்யஜாமஹே' மற்றும் வேதமந்திரங்களால் எரியூட்டி சாம்பலாக்கி எடுக்கப்படும் பஸ்மம் சாந்திக விபூதி.

பசுவின் இனக்குறியிலிருந்து சாணம் வெளிப் படும்போது, அது கீழே விழுவதற்கு முன் பிடித்து ஷடங்க மந்திரத்தால் எரிக்க வைத்து சேகரிக்கும் பஸ்மம் பௌஷ்டிக விபூதி.

அதேபோல் கீழே விழுந்த பசுஞ்சாணத்தால் மந்திரப் பூர்வமாக தயாரிக்கப்படும் பஸ்மம் காமத விபூதி.

இவ்விபூதிகள் செய்வதற்கு, சாணத்தை மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே பிசைந்து, உருண்டையாகச் செய்து, சுத்தமான இடத்தில், சூரிய வெளிச்சத்தில் நன்றாக காய வைக்க வேண்டும்.

நெல், பதர் (அ) உமியைப் பரப்பி அதன் மேல் நன்றாகக் காய்ந்த இந்த உருண்டைகளை அடுக்க



வேண்டும். அரணிக்கட்டையால் கடைந்த அக்னி (அ) நித்ய அக்னி ஹோத்ரம் (அ) சமிதா தானம் செய்பவர்களின் வீட்டிலிருந்து எடுக்கப்பட்ட அக்னியின் மூலம் சிவனுக்குரிய பீஜ மந்திரங்களையும், மிருத்யுஞ்சய மந்திரங்களையும் ஜபித்துக் கொண்டே எரிய வைக்க வேண்டும்.

பௌர்ணமி தினத்தில், சந்திர ஒளியில், வேதப் பிராமணர்கள் நாற்புறமும் அமர்ந்து கொண்டு வேதம் ஓதிக் கொண்டிருக்க இந்த சாண உருண்டைகள் எரிக்கப்பட வேண்டும்.

இவ்விதம் தயாரிக்கப்பட்ட சாம்பலை நன்றாகச் சலித்து வெள்ளிப் பாத்திரத்திலோ (அ) மண்பாண்டத்திலோ வைத்துக் கொண்டு அத்துடன் வெட்டிவேர், சந்தனத் தூள், குங்குமப்பூ, பச்சை கற்பூரம், ஜவ்வாது முதலிய வாசனைத் திரவியங்களை முடிந்த வரையில் கலந்து வைத்துக் கொள்ள வேண்டும்.

நன்றாக வாய்க்கொப்பளித்து விட்டு, கை, கால்களை கழுவிவிட்டு தலைக்குளித்து விட்டு மறுபடியும், வாய்க் கொப்பளித்து தலைமுழுகிவிட்டு, திருநீற்றை எடுத்துக் கொண்டு, பஞ்சாட்சர மந்திரத்தையோ (அ) திரியம்பக மந்திரத்தையோ உச்சரித்துக் கொண்டு, சுட்டு விரல், நடுவிரல், மோதிரவிரலால் சுத்தமான நீரினால் குழைத்து திரிபுண்டரமாக (3 கோடுகளாக) நெற்றியில் பூசிக் கொள்ள வேண்டும். இதற்கு திரயக்புண்டரம் என்று பெயர்.

இதன் மேல்கீற்றுக்கோடு பரமேஸ்வரரையும், நடுக்கீற்றுக்கோடு விஷ்ணுவையும், கீழ்கீற்றுக்கோடு பிரம்மாவையும் குறிக்கும். ஒரே கோடாக இட்டுக் கொண்டால் அது சிவபெருமானையே குறிக்கும். முக்கீற்றுகளும் ரிக், யஜுர், சாம வேதங்களைக் குறிப்பதாகவும், அ, உ, ம என்ற ஓம்காரத்தையும், சத்வ, ரஜஸ், தமஸ் என்ற திரிகுணங்களையும், கிரியா சக்தி, இச்சா சக்தி, ஞானசக்தி என்ற தேவியின் சக்தியையும், சோம யாகம் செய்யும்போது, சோம பானம் தயார் செய்ய சோமலதையை பிரஸ்தாவன, மத்யாந்திநசவா, திரிதியாசநவ என்ற மூன்று விதமான பிழித்தலையும் குறிக்கின்றன.

திருநீற்றை மூன்று கோடுகளாக வரையும்போது நடுவில் குங்குமத்தையும் திலகமாக இட்டுக் கொள்வதும் ஒரு மரபு. இதில் திருநீறு சிவனையும் குங்குமம் சக்தியையும் குறிக்கும். சிவசக்தியின் ஐக்கியத்தால், தெரியும் மற்றும் தெரியாத பிரபஞ்சங்கள் சிருஷ்டிக்கப்படுவதையும் உணர்த்துகிறது.

இவ்விதம் நெற்றியில் பூசிக் கொள்ளும் போதெல்லாம் நம் நெற்றியில் எழுதப்பட்ட தலைவிதி (பிரம்மலிபி) எழுத்து கொஞ்சம் கொஞ்சமாக தேய்ந்து மறையும் என்று சொல்லப்படுகிறது.

திருநீறு தரிக்காத உடல் மயானத்திற்கு சமம். விபூதி இல்லாத நெற்றியையும், சிவன் கோயில் இல்லாத கிராமத்தையும், சிவார்ச்சனை செய்யாத ஜன்மங் களையும், சிவ சிந்தனை இல்லாத வித்தைகளையும் எரித்துவிட வேண்டும் என வேதம் கூறுகிறது. திருநீற்ற



திரியக்புண்டரத்தைப் பழிப்பவர் சிவனையே பழிப்பவராவார்.

விபூதியை திரியக்புண்டரமாக தரிக்காமல் செய்யப் பட்டவை, கேட்கப்பட்டவை, படிக்கப்பட்டவை யெல்லாம் வீணாகிவிடும்.

சிவபெருமான் ஜீவன்களை சிருஷ்டிக்கும் போதே முக்கீற்று விபூதியையே அவைகளில் காட்டியுள்ளார். மனித நெற்றியை குறுக்காகவும் மேலே உயர்ந்ததாகவும் படைத்திருக்கிறார். அனைத்து ஜீவன்களின் நெற்றியிலும் மூன்று கீற்றுகள் திரியக் புண்டரமாக இருப்பதை காணலாம்.

விபூதி அணியாமல் செய்த சத்தியமும், ஆசார அனுஷ்டானங்களும், ஹோமங்களும், பூஜை புனஸ்காரங்களும் தீர்த்த யாத்திரையும் தான தர்மங்களும் வீணாகிவிடும். விபூதி ருத்ராட்சம் அணிந்தவன் அனைத்து பாவங்களிலிருந்தும், துன்பங்களிலிருந்தும் விடுபட்டு பரப்பிரம்மமாகிய பரமேஸ்வரரிடமே ஐக்யமாகிவிடுவான், அதாவது மரணத்தை வெல்வான்.

சிவலிங்க வழிபாடு, ருத்திராட்சம் தரித்தல், திருவைந்தெழுத்து உச்சாடனம், விபூதி தாரணம் இவை சிவனை ஈர்க்கும் உபாயமாகும்.

"சிவ மந்திரத்தை விட உன்னத மந்திரமும், சிவாசாரத்தை விட உயர்ந்த ஆசாரமும், சிவார்ச்சனை யின் புண்ணியத்தை விட சிறந்த புண்ணியமும், சிவபரத்தை விட மேலான பரமும், விபூதிக் குளியலை

விட சிறந்த தீர்த்த ஸ்நானமும், சிவாக்னி வீரியத்தை விட சிறந்த வீரியாக்னியும் இல்லை என்பது போலவே, விபூதி தாரணத்தை விட வேறு சிறந்த தாரணமும் இல்லை" என்று ஸ்காந்தத்தில் சொல்லியிருக்கிறது" (தேவி பாகவதம்).

விபூதிக் குளியல், ஜ்வரம், பிரும்ம ராக்ஷச, பிசாசு, பூதங்களின் தூக்கத்தையும், குஷ்டம், குண்மம் முதலான அறுபத்துநான்கு வித ரோகங்களையும், சிலேஷ்ம வியாதிகளையும், மிருகங்களைப் பற்றிய பயம், திருட்டு பயம் முதலியவைகளையும் ஒழித்துவிடும்.

விபூதியை கழுத்தில் அணிந்தால், கழுத்தினால் செய்த பாபமும், கைகளில் அணிந்தால் கைகளினால் செய்த பாபமும், மார்பில் அணிந்தால் மனதினால் செய்த பாவமும், நாபியில் அணிந்தால் இனக்குறியால் செய்த பாபமும், பக்கவாட்டில் அணிந்தால் பரஸ்திரீகளை பலவிதமாக அனுபவித்த பாவங்களும் நீங்கிவிடும்.

விபூதிக் குளியல் சிரௌத கர்மா என்பதால் காலை, மதியம், மாலை வேளைகளில் (சந்தியா காலம்) செய்ய வேண்டும். விபூதி அணியாமல் சந்தியாவந்தனம் செய்தால் தோஷமுண்டாகும், பலனில்லை.

விபூதியை வலது கை நடுமூன்று விரல்களாலும், ஆறு அங்குல நீளத்திற்கு குறையாமல், கண்களின் கடைசி வரை தரிக்க வேண்டும். மூன்று விரல்களில் மோதிர விரல் (அநாமிகா) அகாரம், நடுவிரல் (மத்திமை) உகாரம், சுட்டுவிரல் (தர்ஜனி) மகாரம் என்ற மூன்றும் முக்குண ஸ்வரூபம். அது திரிபுண்டரம்.



ஒரு சமயம் துர்வாசர் என்கிற சிவபக்த முனிவர், சிவபெருமானையும், பராசக்தியையும் நினைத்து ஜபித்துக் கொண்டே பிதுர் லோகம் சென்றார். அங்கு ஆழமான கிணறாகிய கும்பீபாகம் போன்ற நரகங்களிலிருந்து வந்த அழுகை குரலை அவர் கேட்டார். அது மாபெரும் அக்ரமங்களையும், பாவ பாதகங்களையும் செய்த மகாபாவிகள் அந்த கும்பீபாக நரகத்தில் குரூரமாக தண்டிக்கப்படுவதால் அழுது அலறிய சப்தமேயாகும். இயமனால் ஏற்படுத்தப்பட்ட 86 நரகங்களில் மிகவும் கொடூரமானது கும்பீபாகம்.

சிவத்துரோகிகளும், அம்பாள், திருமால், வேதம், சூரியக்கடவுள், விநாயகர், பிராமணர்கள், பெற்ற தாய், தந்தை, குரு, அண்ணன், புராணங்கள் முதலியவற்றை அவமதித்தவர்கள், காமவெறி மோகத்தால் நெறி தவறி கீழ்த்தரமாக வாழ்ந்தவர்களும் அந்த ஆழமான கிணற்றில் தள்ளப்பட்டு மிகவும் ஈவு இரக்கமின்றி தண்டிக்கப்படுவார்கள். விஷக் கிருமிகளால் கடிக்கப் பட்டும், மலஜலங்களிலேயே வாழ்ந்து கொண்டும், துர்நாற்றத்தினால் அவதிப்பட்டும், தாங்க முடியாத உஷ்ணம், குளிர் ஆகியவற்றால் துன்பப்பட்டும் கதறிக் கதறி கூக்கரலிட்டு அலறுவார்கள்.

இதைக் கேள்விப்பட்ட துர்வாசர் ஆர்வமிகுதியால் அங்கு விரைந்து சென்று அந்த பயங்கரமான நரகக் கிணற்றை எட்டிப் பார்த்தார். அதுசமயம் அவர் நெற்றியில் தரித்திருந்த வாசனை விபூதித் துகள்கள் அக்கிணற்றுக்குள் விழுந்தது. விபூதியின் நறுமணம்

அங்கு பரவியது. மறுகணம் அங்கு வெளிச்சம் உண்டாகியது; இதமான தென்றல் காற்று வீச ஆரம்பித்தது; மலர்களின் நறுமணம் பரவியது; அசுத்தங்களும், தொல்லை தரும் கிருமிகளும் மறைந்தன; அலறி அழுதவர்கள் ஆனந்தத்தினால் ஆடினார்கள், பாடினார்கள்.

யமகிங்கிரர்கள், தங்கள் வேலை பாதிக்கப்பட்டதால் யமதர்ம ராஜனிடம் முறையிட, அவர் தன்னுடைய வாகனமான மதமத என்ற எருமை வாகனத்திலேறி அங்கு விரைந்து சென்று தன் உத்தரவுகள் செயல்படாமல் போனதைக் கண்டு வியந்தார்.

உடனே யமதர்மராஜாவும், மற்ற அனைத்து தேவர்களும், தங்களின் எஜமானரான சிவபெருமானிடமே சென்று, தங்களின் உத்தரவுப்படி நாங்கள் பணியாற்றும்போது எங்கள் கடமைகள் தடைபட்டுப் போனது. இனி பாவிகள் துணிந்து அதிகளவில் பாவம் செய்வார்கள். இதற்கெல்லாம் என்ன காரணமென்று தாங்களே கூறியருள வேண்டும்' என முறையிட்டார்கள்.

சிவபெருமான் கருணையுடன் அவர்களுக்கு அருளுரை வழங்கினார். "நீங்கள் கண்ட அதிசயத்திற்கு காரணம் சைவ முனிவரான துர்வாசர் தரித்திருந்த திருநீறேயாகும். அவரின் நெற்றியிலிருந்து ஒரு விபூதித் துகள் அந்த நரகக் கிணற்றில் விழுந்ததாலும், அதன் நறுமணம் உள்ளே பரவியதாலும், இவ்விதம் நிகழ்ந்தது. இனி அந்த இடம் புண்ணிய தீர்த்தமாகும். அங்கு சிவலிங்கத்தையும், தேவியையும் பிரதிஷ்டை செய்து



பிதுர்லோக வாசிகள் பூஜை செய்வார்கள். இது திருநீற்றின் மகிமையாகும்."

வேறொரு இடத்தில் புதிதாக ஒரு கும்பீபாக நரகத்தை ஏற்படுத்தி, அந்த இடம் திருநீறணிந்த சைவர்களுக்கு தடை செய்யப்பட்ட இடமாகியது.

விறகுக் கட்டையை அக்னியானது பஸ்மமாக்குவது போல், ஞானம் என்கிற அக்னி எல்லாக் கருமங்களையும் பஸ்பமாக்குகிறது. விறகுக் கட்டைகள் அக்னியால் முழுவதுமாக எரிந்த பின் கடைசியாக எஞ்சி நிற்பது வெறும் சாம்பல் தான். அது தான் வெண்மையான நீறு. கர்மாக்கள் ஞானமாகிய அக்னியில் எரிந்து போன பின்பும் ஆதாரமான ஒன்று எஞ்சி, மிகுந்து நிற்பதே 'மகா பஸ்மமான" பரமாத்மா. ஆகவே, ஈஸ்வரன் மகா பஸ்மம்.

விபூதியை தேகம் முழுவதும் பூசிக் கொள்ள வேண்டும். விபூதியை தரித்துக் கொள்வதினால் சகல ஐஸ்வர்யங்களையும், அடையலாம். மக்கள் கோயிலுக்குச் சென்றாலும், ஏதாவது பீடாபரிகாரமாக எந்த வழிபாடுகள் செய்தாலும் விபூதியைத் தான் கேட்கிறார்கள். ஏனெனில், விபூதியே பூத, பிரேத, பிசாசு சேஷ்டைகளிலிருந்து காப்பாற்றும் பெரிய காப்பு (ரட்சை).

விபூதி பரமாத்மாவான ஈஸ்வரனின் அடையாளம் என்பதால் தான் "முழு நீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்" என்று சுந்தரமூர்த்தி நாயனார் தன்னை அடையாளப்படுத்திக் கொள்கிறார்.

திருஞான சம்பந்தப் பெருமான் சிவனைக் காடுடைய சுடலை பொடி பூசியவர் என வர்ணிக்கிறார். அவர் சுடுகாட்டுச் சாம்பலை பூசிக் கொள்கிறார்... என்று எண்ணிக் கொள்கிறார்கள். அந்த சுடுகாடு எது? மனிதனின் இதயத்தில் உள்ள மும்மலமான ஆணவம், கண்மம், மாயை என்கிற பந்தங்களை எரிக்குமிடம். அந்த இதயமே சுடுகாடு. மனிதனை எரிக்கும் மயானமில்லை. மஹாபிரளய காலத்தில் உடலும், உயிரும், அகிலமும் ஒடுங்கிய இடமே சுடலையாகும். பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும், கோள்கள் உட்பட, எரிந்து சாம்பலாகி, துகள்களாகப் பரவியிருக்கும். அந்த சுடலையில் தேவியும், தாமுமாகி எஞ்சியிருப்பார். பிரபஞ்சமே ஆண்டவரின் திருமேனி என்பதால் பிரபஞ்ச சாம்பல்கள் அவர் மீது பூசியது போல வர்ணிக்கப்படுகிறது.

சூரியக் கடவுளுக்கு ஞாயிறு என்றும் பெயருண்டு. "ஞா" என்றால் 'தொங்குகிற' என்றும், "யிறு" என்றால் இறுக்கிப் பிடித்துக் கொள்ளுதல் என்றும் பொருள்.

சூரியன் பிரபஞ்சத்தில் ஓரிடத்தில் நிலையாக இருக்க, சுற்றியுள்ள கிரகங்கள், அவரால் ஈர்க்கப்பட்டு அவரைச் சுற்றி வருகின்றன. அதனால்தான் ஆலயங்களில் நவக்கிரகங்களுக்கு அரசனான சூரியனை நடுவிலும், மற்ற கிரங்களை சுற்றிலும் வைத்து பிரதிஷ்டை செய்கிறார்கள்.

வால்மீகி இராமாயணம் கிஷ்கிந்தா காண்டம், 17வது சருக்கத்தில், "ராம பாணத்தால் அடிபட்டு வாலி தரையில் விழுந்து கிடந்தான். அப்போது அவன்



'பிரளய காலத்தில்' தைவகதியால் ஆகாசத்திலிருந்து பூமியில் தள்ளப்பட்ட சூரியனைப்" போல ஜ்வலித்தான் என்று வர்ணிக்கப்படுகிறது.

சூரியக்கோள் பூமியை விட பல மடங்கு மிகப் பெரியது. அவ்வித நெருப்புக் கோள், பூமியில் விழுந்தவுடன் ஆழிநீர் ஆவியாகிவிடும். அக்னியால் சூழப்பட்டு, விழுங்கப்பட்ட பூமி முழுவதுமாக எரிந்து சாம்பலாகிவிடும். சூரியன் கீழே விழுந்து விட்டதால், ஈர்ப்பு இல்லாமல் போன மற்ற கோள்கள் ஒன்றோடு ஒன்று முட்டி மோதிக் கொண்டு (Big Bang) அனைத்தும் பூமியில் விழுந்து சாம்பலாகிவிடும். பிரபஞ்சம் முழுதும் சாம்பலால் நிறைந்துவிடும். அந்த சாம்பலில் எரிந்து போன அனைத்து ஜீவராசிகளின் உயிர்களும், பீஜமும் இருக்கும் அந்த சாம்பலிலிருந்தே (Nebula) மறுபடியும் சிருஷ்டி உண்டாகும்.

திருஞானசம்பந்தர் திருமயிலையில் "மட்டிட்ட புன்னை" என்ற பாடலைப் பாடி சிவனேசன் செட்டியாரின் மகள் அங்கப்பூம்பாவையை அவளுடைய அஸ்தியிலிருந்தே மீண்டும் உயிர்ப்பித்தார் அல்லவா! கிரேக்க புராணத்திலும் ஃபீனிக்ஸ் பறவை அதனுடைய சாம்பலிலிருந்து மீண்டும் உயிர் பெற்று எழும் எனக் கூறப்பட்டிருக்கிறது.

பிரபஞ்சமே சிவனாரின் திருமேனியென்றும், பிரளய காலத்தில் அனைத்து ஜீவன்களும் அவரிடமே ஒடுங்கு கின்றதென்றும், அந்தப் பிரபஞ்ச சாம்பலிலிருந்தே அவர் மீண்டும் அனைத்தையும் சிருஷ்டி செய்வார் என்றும் முன்பே கண்டோம்.

விபூதி என்றும் அழிவதில்லை; அது நிலையானது. எது நிலையானதோ அதுவே சிவன்.

அத்வைதத்தின் சிறப்பு இலட்சணமாக விபூதி விளங்குகிறது. முழுவதும் திருநீறு பூசிய சிவபெருமான் ஆசுதோஷியாக (சந்தோஷமடைந்து தயங்காமல் உடனே அருள் புரிபவர்) அத்வைதத்தை நிருபிக்கிறார்.

சைவ மதம் ஒரு காலத்தில் உலகமெங்கும் பின்பற்றப் பட்டது. ஆஸ்திரேலியாவில் உள்ள பழங்குடியினர் சிவ நடனம் ஆடுகின்றனர். உடம்பு எல்லாம் சாம்பல் பூசிக் கொண்டு, நெற்றியின் நடுவில் கண் வரைந்து கொண்டு கையில், சூலாயுதம் பிடித்துக் கொண்டு ஆடுகிறார்கள். அவர்களும் விபூதியின் மகத்துவத்தை அறிந்து போற்றினார்கள் எனப் புலனாகிறது.

பனைமரம் உலகமெங்கிலும் அனைத்து மதங்களிலும் புனிதமாகக் கருதப்படுகிறது. எகிப்திலிருந்து ஜெருசலம் திரும்பிய ஏசுநாதரை மக்கள் கையில் பனை ஓலைகளைப் பிடித்துக் கொண்டு மகிழ்ச்சி ஆரவாரத்துடன் வரவேற்றார்கள். பிறகு அந்த ஓலைகளை சுட்டெரித்து சாம்பலாக்கி, சாம்பல் திருநாளில் அச்சாம்பலை தலையில் தூவிக் கொண்டும், நெற்றியில் சிலுவை வடிவில் தரித்துக் கொண்டும், பாவ விமோசனம் கிடைத்ததாகத் தூய்மை பெற்று மகிழ்ந்தார்கள். "ஏ, மனிதனே! நினைவில் வைத்துக் கொள். நீ சாம்பல் துகள். அதற்குள்ளேயே நீ மீண்டும் திரும்புவாய்," என்ற மந்திரத்தைக் கூறி, பாதிரியார் சாம்பலை பக்தர்களுக்கு அணிவிப்பார். அவ்விதம் நெற்றியிலும், உச்சந்தலையிலும் சாம்பல்



சின்னம் இல்லாதவர்கள் அழிக்கப்பட்டார்கள் (Genesis 3:9, Job-42-36, Mathew 11.21, Luke10:13, Hebrew 9:13 Ezekisl 9)

இந்தப் பனை ஓலை சாம்பல் விபூதியேயாகும். உலகிலுள்ள அனைத்து நாடுகளிலும் உள்ள கிருத்துவர்கள் இந்த சாம்பல் (விபூதித்) திருநாளைக் கொண்டாடுவதால் உலகமும், பிரபஞ்சமும் சிவமயம் என்பதும், விபூதியால் தூய்மையடைகிறது என்பதும் நிருபணமாகிறது.

பட்டினத்தார் தன் பாடலில், "ஏ மனிதனே! நெற்றியில் பூசும் விபூதியைப் போல் நம்முடைய உடலும் ஒரு காலத்தில் பிடி சாம்பலாகப் போகும். அதற்கு முன் இறைவனை நினை. நல்லன செய். அவன் அருளைப் பெற வழிபடு. இந்த வாழ்வு நிலையற்றது. முடி சார்ந்த மன்னரும், மற்றுமுள்ளோரும் முடிவில் பிடி சாம்பலாவார்" என அறிவுறுத்தியிருக்கிறார்.

மிகவும் புனிதமானதும், அபூர்வமானதுமான சிவரஹஸ்யம் என்ற நூலில் விபூதியின் மகத்துவத்தைப் பற்றி விவரித்திருப்பதைக் காண்போம். இது சிவபெருமான் ஜைகீஷ்வர் என்ற முனிவருக்கு உபதேசிக்கப்பட்டதாகவும், அதை சூதமகரிஷி மற்ற முனிவர்களுக்கு கூறியதாகவும் அமைகிறது.

சிவ ரஹஸ்யம், எட்டாவது அம்சம், ஒன்பதாவது அத்யாயம் விபூதி மகிமை;–

(1) சிவ பெருமானை வணங்குபவர்கள் விபூதி பூசிக் கொள்ளுதல் வேண்டும்.

(2) விபூதி அணியாதவனிடம் ஞானம் ஏற்படுவ தில்லை; விபூதி பூசிக்கொள்பவன் ஞானத்தையும், மோக்ஷத்தையும் அடைகிறான்.

(3) எவன் "பஸ்ம – பஸ்ம" எனும் நாமத்தைக் கூறு கிறானோ அவன் அனைத்து பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான்.

(4) எவனொருவன் தனது தேகத்தில் விபூதியை பூசிக் கொள்கிறானோ அவன் சம்சாரம் எனும் பாவத்திலிருந்து விடுபடுகிறான்.

(5) பிராமணன், வணிகன், குடும்பஸ்தன், முனி ஆகிய அனைவரும் விபூதி பூசிக் கொள்ளல் வேண்டும்.

(6) எவனொருவன் விபூதி பூசிக் கொள்ளாமல் கர்மங்களை செய்கிறானோ அக்கர்மாவின் பலனை அவன் அடைவதில்லை.

(7) அதர்வண வேதத்தில் பஸ்மத்தை மிகவும் புண்யம் என்ற அர்த்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.

(8) பஸ்மம் அணிந்தவன் சிவபெருமானின் பரம பக்தன் ஆகிறான். அவன் அவரது அருளுக்கு பாத்திரமாகிறான்.

(9) பஸ்மம் தரித்தவரை எவன் வணங்க மறுக்கிறானோ அவன் பாபியாகிறான்.

(10) ஜீவாத்மா, பரமாத்மா ஐக்கிய ஞானம் விபூதி தரித்தவனுக்கு ஏற்படுகிறது.



(11) பஸ்மம் தரித்தவனுக்கு தேவர்கள் அனைவரும் நண்பர்களாவர்.

(12) பஸ்மம் தரிக்காமல் சிவனை வழிபட்டால் சிவபெருமான் அவனது பூஜையை ஏற்பதில்லை.

(13) சந்தியாவந்தனம், விவாகம், முதலிய கர்மாக்களை செய்யும்போது விபூதி தாரணம் மிகவும் அவசியமாகிறது.

(14) பஸ்மம் இல்லாமல் செய்யும் செயல்கள் அனைத்தும் பலனற்றவைகளாகும்.

(15) சுத்தமற்றவனும் பஸ்மதாரணத்தினால் சுத்தமுள்ள வனாகிறான். சாப்பிடத் தகாதவைகளை சாப்பிட்டால் பஸ்மதாரணத்தின் மூலம் அப்பாபங்களிலிருந்து விடுபடுகிறான்.

(16) ஒருவன் விபூதி அணிந்து சிவபிரானுக்கு தண்ணீர், மலர்கள் ஆகியவற்றை சமர்ப்பித்தால் அதனை அவர் மகிழ்வுடன் ஏற்றுக் கொள்கிறார்.

(17) விபூதி அணிந்து தேவர்களுக்கு செய்யப்படும் யாகம் முதலியவை உடனே ஏற்கப்படுகின்றன.

(18) விபூதி அணிந்தவனின் பாவங்கள் அக்கணமே நசிந்து விடுகிறது.

(19) விபூதி அணிந்தவரை கிரஹதோஷங்கள் பாதிப்பதில்லை.

பத்தாவது அம்சத்தில், விபூதிக்கு ஐந்து காரணப் பெயர்கள் உண்டென கூறப்பட்டுள்ளது. அவை யாவன:

(1)பஸ்மம், (2)பசிதம், (3)பூதி, (4)க்ஷாரம், (5)ரட்சை. ஞானத்தை அளிப்பதால் பஸ்மம் என்றும், ஐஸ்வர்யத்தை அளிப்பதால் 'பூதி' என்றும், பாவங்களை அழிப்பதால் பசிதம் என்றும், நாம் பாவங்கள் செய்யாமல் இருக்க உதவுவது க்ஷாரம் என்றும், தீவினைகளில் இருந்து காப்பதால் ரட்சை என்றும் பெயர்.

சிவரஹஸ்யத்திலும் திருநீற்றின் மகிமைப் பற்றி விளக்கப்பட்டிருப்பதை இதுவரை கண்டோம்.

நமது சைவப் பன்னிரு திருமுறையில் உள்ள இரண்டாம் திருமுறையிலும், முருகப் பெருமான் அம்சமாக அவதரித்த ஞானக்குழந்தை, திருஞான சம்பந்தர், திருநீற்றின் மாட்சிமை பற்றியும், அது நல்கும் பலன்களைப் பற்றியும் பாடியுள்ளார். அதையும் அறிந்து கொள்வோம்.

மந்திர வார்த்தைகளைப் போல் திருநீறு செயல்பட்டு நன்மை தருகிறது. ஆதலால், தேவலோகத்தில் உள்ளவர்களும், திருநீற்றை அணிகிறார்கள். தந்திரப் பிரயோகங்களுக்கு இன்றியமையாதது. அது முக அழகையும், வசீகரத்தையும் தரவல்லது. வேத மந்திரங்களால் போற்றப்படுவது. நமது சைவ சமயத்தின் சின்னமாக விளங்குவதும் துதிக்கப் படுவதுமாகும்.

ரிக், யஜுர், அதர்வண வேதத்தில் சிறப்பாகப் புகழப்பட்டது. மிகவும் கொடிய துன்பங்களைத் தீர்ப்பது நீறு. மனம், புத்தி, சித்தம், கோபம், அகங்காரம்



முதலியவற்றால் ஏற்படும் துயரத்தை நீக்கும். மனதை நல்வழிப்படுத்தும். அறியாமை மற்றும் வீண் பழியினால் விளையும் வினைகளை அகற்றும். தினமும் போற்றத் தகுந்ததும், என்றென்றும் நிலைத்து நிற்பதுமாகும். ஏனெனில், திருநீறே அனைத்துப் பொருட்களின் கடைசி நிலை. அதுவே சிவன்.

சிவாய நம; என்று திருநீறணிந்தால் முக்தி கிடைக்கும். மாமுனிவர்கள் விரும்பித் தரிப்பதும் உண்மையானதும் திருநீறே. ஞானிகளாலும், சான்றோர்களாலும் மேன்மையானதாகப் போற்றப் படுவது திருநீறு. திருநீறணிந்தால் இயற்கையாகவே சிவ பக்தி உணர்வு உண்டாகிறது. அதைப் பூசிக் கொள்வதால் மனதில் மகிழ்ச்சி உண்டாகிறது. இறுதியில், உண்மை இறைத் தத்துவத்தை உணர வைத்து, சித்தியை (ஞானத்தெளிவை) தருவது திருநீறேயாகும்.

பக்தியின் விளைவு: (1)சிவனடியார்களை வணங்குதல், (2)பூஜை செய்ய மிகவும் விரும்புதல், (3)சிவார்ச்சனை செய்தல், (4)அனுஷ்டான நியமங்களை மேற்கொள்ளுதல், (5)சிவனைப் பற்றியும், சைவப் புராணங்களையும் கேட்டல், (6)விரதம் இருப்பது, (7)கண்களில் சிவ தரிசனத்தால் நீர் சொறிதல், (8)உழவாரப் பணி செய்தல்.

சித்தியினால் கிடைக்கும் சக்திகள் (1)அனிமா, (2)மகிமா, (3)கரிமா, (4)இலகிமா, (5)பிராரத்தி, (6)பிரகாமியம், (7)ஈசத்துவம், (8)வசித்துவம்.

திருநீறு அணிந்தவர்களைக் காண்பவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள். முகத்தில் பிரகாசத்தை (தேஜஸை, பொலிவை) மிளிரச் செய்யும். அதை விரும்பி அணிபவர்களுக்கெல்லாம் பெருமையைத் தரும். இறப்பைத் தடுத்து, நல்ல புத்தியையும், ஞானத்தையும் நல்கி உயர்வை அளிக்கும்.

உடல் முழுவதும் திருநீறு பூசிக் கொண்டால் சரீரத்திற்கு இதத்தையும், துர்நாற்றத்தையும் போக்கி நறுமணத்தை தரும். துர்நீற்றை கிரகித்து வெளியில் தள்ளி பிணிகளை குணப்படுத்தும். சிவபுண்ணியத்தை அளிக்கும். பேச இனிமையானது. முற்றும் துறந்த முனிவர்கள், துறவிகள், சித்த புருஷர்களுக்கு ஆதரவாக நின்று அவர்கள் உலக ஈடுபாடுகளைக் களைந்து ஆசைகளை அறவே துறந்து மேலான ஆத்ம நிலைக்கு செல்ல சாதகமாகும். கடைசியில் எஞ்சி நிலைத்து நிற்கும், முடிவுக்கும் முடிவாக இருப்பதும், நாடெல்லாம் போற்றிப் புகழும் மேன்மையுடையதாகவு விளங்குவது திருநீறு.

திருநீறே பெரும் செல்வமாகும். (பொன், வெள்ளி வைரம், முத்து, மரகதம் போன்று). அவலமா துன்பங்களையும் இழிவுகளையும் அறுத்துத் தள்ளுவ திருநீறு. அனைத்து வருத்தத்தையும் தணித்த வானோர்கள் சகல சௌபாக்யங்களையும், தரு சிறப்பைக் கொண்டது திருநீறு. புண்ணியம் செய் மகான்கள் மேன்மேலும் தேஜஸை (முகப்பொலிவ இறை அருளால் அபிவிருத்தி செய்து கொள்ள உறுதுணையாக இருப்பது திருநீறு. செல்வ

சிறப்புமிக்க, மாடமாளிகைகள் சூழ்ந்த மதுரையில் (ஆலவாயில்) குடியிருக்கும் சிவபெருமானுக்கு பிடித்த மானது திருநீறு. திரு என்பது திருமகளைக் குறிக்கும். திருநீறு என்று கூறப்பட்டிருப்பதால் திரு(லட்சுமி)யை தன்னகத்தே கொண்ட ஊர். ஆகவே, சொக்கநாதர் திருநீறு பூசும் ஈசன். திருவாளர். அவர் வசிக்கும் மதுரை மாநகர் திருக்கயிலைக்குச் சமமான புண்ணிய பூமி.

திருநீறு திரிபுராந்தகர்களின் முப்புரங்களையும் எரித்து சாம்பலாக்கியது (திருநீறே சிவன்), இம்மையிலும் மறுமையிலும் ஜீவன்களுக்கு ஆதரவாக, துணையாக இருப்பது திருநீறு. அது உயர் தத்துவமாகவும், பொருளாகவும் நினைத்து படிக்கப்படுவது. அனைத்து பாக்யங்களையும் (விபூதிகளையும்) தர வல்லது திருநீறு. மாயையினால் மனிதர்களுக்கு ஏற்படும் சோர்வையும், ஆசாபாசங்களையும் நீக்கி உற்சாகத்தைத் தந்து, புத்துணர்ச்சி மூலம் தூய்மைப்படுத்தி திருவருள் கொடுக்கும் திருநீறு.

திருநீறு பூசிய இராவணனுக்கு பெருமையையும், வாளையும், சிவனிடமிருந்து திருநீறு ஈட்டித் தந்தது. சிவனாரைப் போற்றி வழிபடுவதற்கான எண்ணத்தைத் தூண்டுவது திருநீறு. அருள் சக்தியுடையதும், பாவத்தை அடியோடு அறுத்துத் தள்ளுவதும் திருநீறே. தாராவனம் என்ற விலை உயர்ந்த உலோகம் போல் (பொன்னைப் போல்) சிறந்த தன்மைகளை உடையது திருநீறு. தத்துவத்தை குறிப்பது திருநீறு. அரவம் (பாம்பு) அரவணைத்து இருக்கும் சிவனாரின் திருமேனி போன்றது திருநீறு.

திருமாலும், பிரம்மாவும் புரிந்து கொள்ள முடியாதது திருநீறு. வானில் வாழும் தேவர்கள் தங்கள் திருமேனியில் வெண்திருநீறு பூசியுள்ளர்கள். சரீரத்தின் துன்பவங்களையும் தீர்த்து சுகம் தருவது நீறு. ஆலகால நஞ்சு உண்டு காத்த ஆலவாய் ஈசனுக்குரியது திருநீறு. இவ்வாறு உடம்பின் சிறப்பு திருநீறால் அமைகிறது என்று சொல்லப்படுகிறது.

புத்தர்களும், ஜைனர்களும் கண்டதும் திகைத்து நிற்பது திருநீறு. அதை நெஞ்சில் பூசினால் தெய்வீக உணர்வைத் தரவல்லது. அகங்காரத்தின் எட்டு வெளிப்பாடுகளை வென்றவர்களும், ஆத்ம ஞானிகளும் பூசிக்கும் திருநீறு, கொல்லாமை, ஐம்பொறி அடக்கல், பொறுமை, அருள், ஞானம், வாய்மை, தவம், அன்பு முதலியவற்றையும் அளிக்கும்.

ஞானசம்பந்தப் பெருமானால் அருளப் பெற்ற இப்பதிகம், அவருடைய திருமடத்தில் இட்ட தீயே பாண்டிய மன்னருக்கு வெப்பு நோயாக மாறியதையும் சேர்த்து ஒரேடியாக அனைத்து தீவினைகளையும் பிணிகளையும் தீர்த்தது.

கங்காளன் (சிவபெருமான்) பூசும் கவசம் போன்ற திருநீற்றை பொலிவு குறையாமல் நாமும் பூசிக் கொண்டால், எல்லா வினைகளும் நீங்கி, சிவகதி அடைந்து, சிவனாரின் அழகிய திருவடிகளை அடையலாம் என்றும் திருமூலர் அறிவுறுத்துகிறார்.

விபூதிக்கு மருத்துவ குணங்கள் உள்ளன. இது ஆயுர்வேத மருத்துவ முறைகளில் மருந்து



தயாரிக்கப்பயன்படுகிறது. உடம்பில் உள்ள துர்நீரைக் கிரகித்துக் கொண்டு ஜலதோஷம், தலைவலி மற்றும் பல சரீர உபாதைகளைக் குணப்படுத்துகிறது. சாம்பல் நிரப்பிய துணி மூட்டையை தலையணையாக வைத்துக் கொண்டு தூங்கினால் ஜலதோஷம் நிவர்த்தியாகும்.

நம் ஆதி குருவான ஸ்ரீ சங்கரபகவத்பாதருக்கு பிற சித்தாந்தக்காரர்கள் பில்லி, சூன்யம் வைத்ததால் சரும உபாதை ஏற்பட்டது. அதனால் அவர் திருச்செந்தூர் சென்று சுப்ரமணிய ஸ்வாமியை தரிசித்தார். 'சுப்ரமண்ய புஜங்கம்' என்ற ஒரு ஸ்தோத்திரம் இயற்றி வணங்கினார். அதில் அவர் சொல்கிறார்.

"தாரகனை வென்றவரே! கடுமையான வலிப்பு நோய், க்ஷயரோகம், நுரையீரல் நோய்கள், பாலியல் நோய்கள், காய்ச்சல், மன நோய்கள் முதலியவை பன்னீர் இலையில் வைத்துத் தரப்படுகிற உன்னுடைய விபூதிப் பிரசாதத்தை பார்த்த மாத்திரத்தில் மறைந்துவிடும்". அவர் மீது ஏவி விடப்பட்ட பில்லி, சூனியமும் விபூதியைத் தரித்தவுடன் விலகி விட்டது; என்னே விபூதியின் மகிமை!

விஸ்வாமித்திரர் காசநோயால் அவதிப்பட்டபோது, ஒரு பெரியவர் வந்து 'விபூதியைப் பூசி, இலையுடன் (பன்னீர் இலை) உள்ளுக்கு சாப்பிடு,' எனக் கூறிச் சென்றார். மகரிஷியும் அப்படியே செய்ய நோய் தீர்ந்தது. வந்தவர் முருகப்பெருமான் என்பதை பின்னர் உணர்ந்தார்.

வியாபார நோக்கில் லாபம் மட்டும் கருதி தயாரிக்கப்படும் சாம்பலில், வெள்ளை மாக்கல்தூள், கால்சியம் கார்பனேட், காகித சாம்பல், அனல்மின் நிலைய சாம்பல் முதலியவற்றைச் சேர்க்கிறார்கள். இதை பூசிக் கொள்வதால் தோல் ஒவ்வாமை நோய் ஏற்படுகிறது. ஆகவே, சாஸ்திரீய முறையில், வேதமந்திர உச்சாடனத்துடன், தயாரிக்கப்படும் திருநீறையே உபயோகிக்க வேண்டும்.

யாகசாலைகளில் ஹோம குண்டத்தில், எரிந்த நிலையில், உள்ள விசேஷமான மரக்கட்டைகளின் மீது படர்ந்திருக்கும் நீற்றுப் போன சாம்பல் மிகவும் புனிதமான விபூதியாகும்.



# 2. ருத்ராட்சம்

சிவச் சின்னங்களில் மிகவும் முக்கியமானதாகவும், புனிதமானதாகவும் கருதப்படுவது ருத்ராட்சம். மற்ற இரண்டு சின்னங்கள் விபூதியும், மூன்றாம் பிறையுமாகும்.



ருத்ராட்சத்தின் மகாத்மியம் பற்றி ஆதியில் லிங்க புராணத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அகில உலகெங்கிலும் எவ்வாறு திருநீறு புனிதமாகவும், இறை சக்தி மிகுந்ததாகவும் போற்றப்பட்டு உடலிலும், நெற்றியிலும் பூசப்படுகிறதோ அவ்வாறே ருத்ராட்சமும் ஜபமாலையாகவும், கழுத்தில் அணியும் அணிகலனாகவும் உபயோகிக்கப்படுகிறது.

உடல், ஆத்மா மற்றும் மனதைப் புனிதப்படுத்தி இறையுணர்வைத் தூண்டி, மனிதனை மேன்மைப் படுத்தி, நல்வழியில் வாழ உறுதுணையாக இருக்கிறது.

ருத்ராட்சம் என்றால் ருத்ரனின் கண்கள் என்று பொருள். 'ருத்' என்றல் துன்பம், வேதனை, கொடுமை. 'ரன்' என்றால் ஓடுதல், ஓட்டிவிடுதல், அதாவது துன்பத்தை ஓட்டிவிடுவது என்று பொருள். ருத்ரனாகிய சிவானரின் கண்களில் இருந்து வந்ததால் ருத்ராட்சம்.

மஹாவிஷ்ணுவின் க்ண்கள் தாமரை மலரையும், சிவபெருமானின் கண்கள் ருத்ராட்சத்தையும் ஒத்திருக்கின்றன என வர்ணிக்கிறோம்.

ருத்ராட்சத்தின் மகிமை பற்றி சைவ பதினெட்டுப் புராணங்களில் ஒன்றான, மிகப் பிரமாண்டமான ஸ்காந்த புராணத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. அதேபோல், பல்லோராலும் அறியப்படாத சிவரஹஸ்யம் என்கிற சமஸ்கிருத மாபெரும் தனி நூலும், பரவலாகப் பிரபலமடைந்திருக்கும் ஸ்ரீதேவி பாகவதம் என்கிற நூலும் ருத்திராட்சத்தின் மகிமையைப் பற்றி கூறுகின்றன.

ருத்ராட்சத்தைப் பற்றி, பிற்காலத்தில் எழுதப்பட்ட நூல்கள் அனைத்திற்கும் ஸ்காந்த புராணமே அடிப்படை. வைணவ நூல்களான பத்ம புராணத்திலும், கூர்ம புராணத்திலும், மற்றும் வைவர்த்த புராணத்திலும் கூட இதன் மாட்சிமை பற்றிய விவரங்கள் உள்ளன.

ருத்ராட்சம், பார்க்கவே மகிழ்ச்சியையும், சிவபக்தியையும் தூண்டும் ஒரு புனிதமான மரத்தின் விதையேயாகும்.

தாவரவியல் நூல்களில் ருத்ராட்ச மரங்களைப் பற்றி விரிவான குறிப்புகள் உள்ளன.



இலியோகார்பஸ் என்றும், இகனிட்ரஸ் என்ற பெயராலும் இம்மரங்கள் அறியப்படுகின்றன. மலாய் மற்றும் சூடான் மொழியில் இது கண்ட்ரி எனப் பெயர் பெற்றிருக்கிறது.

இம்மரங்கள் பொதுவாக உலகில் பல நாடுகளிலும் காணப்படுகின்றன. வெப்பம் குறைந்த சீதோஷ்ண முள்ள, கடல் மட்டத்திலிருந்து 2200–2500 அடி உயரமுள்ள இடங்களில் இது நன்றாக வளர்கிறது. நேபாளம், இலங்கை, மடகாஸ்கர், ஆஸ்த்திரேலியா, பெரு, மெக்சிகோ, பிலிப்பைன்ஸ், சைனா, நியுஜிலாந்து, பப்புவாகினியா, ஜப்பான், அமெரிக்கா, ஹவாய்த் தீவுகள் என்கிற நாடுகளிலும் மற்றும் உலகெங்கிலும் பரவலாக காணப்படுகிறது. இதனால் உலகம் சிவமயம் என்றும், சைவம் எங்கும் நிறைந்திருந்தது என்றும் ஊர்ஜிதமாகிறது.

தமிழ்நாட்டில் நீலகிரி, பழநிமலை, திருவண் ணாமலை போன்ற மலைப் பகுதிகளில் வளர்கின்றன. மஹாராஷ்டிர மாநிலத்திலுள்ள மகாபலேஷ்வர் என்ற சிவ ஸ்தலத்தில் உள்ள மரம் விசேஷமாக பிறைச் சந்திரன் வடிவிலான ருத்ராட்சங்களைக் காய்க்கிறது. இந்த விதமான அர்த்த சந்திர ருத்ராட்சங்கள் சிவச் சின்னம் என்பதை நிரூபிக்கின்றன. சிவ பெருமான் பிறை சூடியவர்.

சத்ராட்சம், பத்ராட்சம் என்ற இருவகை ருத்ராட்சங்களும் உள்ளன. இதில் சத்ராட்சம் என்பது பிரும்ம தேவனால் சிருஷ்டிக்கப்பட்டு அவரது யாக

குண்டத்திலிருந்து வெளிப்பட்டதாக கூறப்படுகிறது. இதைப் பற்றி அதிக தகவல்கள் கிடைக்கவில்லை.

பத்ராட்சம் என்பது விஸ்வாமித்திர மகரிஷியால், பிரும்மாவுடன் ஏற்பட்ட போட்டி மனப்பான்மையால், அவரின் தபோபலத்தினால் சிருஷ்டிக்கப்பட்டது. இந்த மரங்களும் காணப்படுகின்றன. ஆனால், அதன் காய்கள் பிரசித்தமடையவில்லை. இதன் கொட்டைகளில், மணியாகக் கோப்பதற்கு ஏதுவாக நடுவில் துவாரம் இருக்காது. இவைகள் ஒற்றை, இரட்டை மற்றும் முக்கொட்டைகளாகவும் இருக்கும்.

இம்மரங்கள் பெரியனவாக 100 அடி வரை உயரமாக வளரும். பூக்கள் வெள்ளை நிறத்தில் சிறியதாக இருக்கும். காய்கள் பச்சையாகவும், நன்றாக பழுத்த வுடன் கருநீல நிறமாகவும் மாறி கீழே விழுந்துவிடும்.

ஒருசமயம் நாராயணர் தேவரிஷி நாரதருக்கு ருத்ராட்சத்தின் மகிமையைப் பற்றியும், அதன் பலன்களைப் பற்றியும் உபதேசம் செய்தார். இதன் மகத்துவத்தை சிவனார் குமரக் கடவுளுக்கு அருளி அதன் விவரங்களையும் வெளிப்படுத்தினார்.

மிகவும் பூர்வமான புராதன காலத்தில் வடகிழக்கு இந்தியாவில், தற்போதைய திரிபுரா என்ற மாநிலத்தை திரிபுராந்தகர்கள் என்று மூன்று சகோதரர்கள் செவ்வனே ஆட்சி செய்தார்கள். அவர்கள் சிவ பக்தி நிரம்பியவர்களாகவும், சிறந்த அறிவாளிகளாகவும் இருந்தனர். இவர்கள் தங்களை மேன்மேலும் மேம்படுத்திக் கொள்ளவும், அனைத்து போக பாக்யங்களை அனுபவிக்க வேண்டியும், சாவா வாழ்வையும் வேண்டி சிவபெருமானைக் குறித்து உக்கிரமான தபசை நீண்ட நாட்கள் செய்தார்கள். அவர்களின் தபசினால் மகிழ்ந்த சிவபெருமான் அவர்களுக்கு நீண்ட ஆயுளையும், சகல சௌபாக்யங்களையும் எவராலும் வெல்ல முடியாத வீரத்தையும், வரமாக அளித்தார்.



இவ்விதமான சிறப்பான வரங்களைப் பெற்ற திரிபுராந்தகர்கள் தங்களுக்கென தங்கத்தினாலும், வெள்ளியாலும் தாமிரத்தாலும் பலமான கோட்டை களைக் கட்டிக் கொண்டு அதிகார வெறியுடன் ஆட்சி செய்தார்கள். தங்கள் கோட்டைகளிலிருந்தபடியே விண்ணில் பறந்து வானவர்களையும், தேவர்களையும் தாக்கித் துன்புறுத்தினார்கள். அவர்களின் செல்வங்களை அபகரித்ததுடன், நகரங்களையும் அழித்தார்கள்.

தேவேந்திரராலும், பிரும்ம தேவராலும், விஷ்ணுவாலும் அவர்களை வென்று அழிக்க முடியாமல் போனதால் அனைவரும் சிவபெருமானிடம் சென்று தங்களைக் காப்பாற்ற வேண்டி பிரார்த்தித் தார்கள். அவர்களின் அவல நிலையைக் கண்டு சிவனார் வருத்தம் கொண்டார். அவர்களைக் காப்பாற்ற திருவுள்ளம் கொண்டார்.

திரிபுராந்தகர்களை சம்ஹாரம் செய்ய, அக்னியைப் போல் எரித்து அழிப்பதாகவும், பயங்கரமான உருவம்

உள்ளதாகவும், தடைகளை நீக்கித் தாண்டி செல்வதாகவும் உள்ள 'அகோரம்' என்ற மிகவும் வலிமை மிக்க ஆயுதத்தை கண்கள் மூடிய நிலையில், ஆயிரம் ஆண்டுகள், தியானித்து உருவாக்கினார். தியானம் முடிந்து, கண் விழித்தபோது அவரின் மூன்று கண்களிலிருந்தும் (சூரியன், அக்னி, சந்திரன்) அனுக்கிரஹ நீர்த்துளிகள் தளும்பி பூமியில் விழுந்தன. அவைகளிலிருந்து புனிதமான ருத்ராட்ச மரங்கள் தோன்றின. அவைகளிலிருந்து 38 வகையான ருத்ராட்சங்கள் உண்டாகின. வலது கண்ணாகிய சூரியனில் இருந்து செந்நிறத்தில் 12 வகைகளும், சந்திர விழியிலிருந்து வெண்மை நிறத்தில் 16 வகைகளும், அக்னி விழியிலிருந்து கறுப்பு வண்ணத்தில் 10 வகைகளும் உண்டாகின.

தவத்தை முடித்துக் கொண்ட விண்ணுலக கடவுள் சிவனார், பூமியைத் தேராகவும், சூரிய, சந்திரர்களை சக்கரமாகவும் அமைத்து, திரிபுராந்தகர்களை விண்ணில் எதிர்த்து யுத்தம் செய்தார். சிவனாரின் தாக்குதலையும், அவரின் அகோர அஸ்திரத்தின் கொடூரத்தையும் தாக்குப்பிடிக்க முடியாமல், திரிபராந்தகர்களின் மூன்று கோட்டைகளும் தூள் தூளாகி சாம்பலாயின. இறந்துபட்ட திரிபுராந்தர்கள் பண்ணுருட்டிக்கு அருகிலுள்ள திருவதிகை என்ற புண்ணிய பூமியில் விழுந்து வீடு பெற்றார்கள்.

சிவபெருமான் வீரச் செயல்கள் செய்த அட்டவீரட் டானங்களில் (அஷ்டவீரஸ்தலங்களில்) திருவதிகையும் ஒன்றாகும். இவ்வூரில் எழுந்தருளியிருக்கும் சிவனார் ஸ்ரீ வீரட்டானேஸ்வரர் என்று வணங்கப்படுபவர். இத்தலத்தில் இவரை துதித்தால் கல்வி, செல்வம், வெற்றி கிட்டும்.



ருத்ராட்ச மணிகள், நெல்லிக்காய், எலுமிச்சை, ஆரஞ்சு பழங்களைப் போல் சுளை சுளையாக இருக்கும். இதற்கு முகங்கள் என்று பெயர்.

ஒரே ஒரு முகமுள்ளது சிவனாகவே கருதப்படுகிறது. இது அனைத்து பாவங்களையும், தோஷங்களையும் நீக்கும்.

இருமுகமுள்ளது பராசக்தி ஸ்வரூபம். இது தெரிந்தோ, தெரியாமலோ செய்த பாவங்களை நீக்கும்.

மூன்று முகமுள்ளது அக்னிஸ்ரூபம். இது பெண்களுக்கு செய்த பாவத்தை (ஸ்திரிஹத்தி) நீக்கும்.

நான்கு முகமுள்ளது பிரம்மாவின் அடையாளம். இது மனிதனைக் கொலை செய்த பாவத்தை நீக்கும்.

ஐந்து முகமுள்ளது காலாக்னியான ருத்திரஸ்வரூபம். இது தடை செய்யப்பட்டதை சாப்பிட்டதாலும், முறையில்லாத மற்றும் தடை செய்யப்பட்ட மாதர்களை புணர்ந்ததினால் உண்டான பாவங்களையும், இது போன்ற மகாபாவங்களையும் நீக்கும்.

ஆறுமுகமுள்ளது சுப்ரமண்ய அம்சம். பிரம்மஹத்தி முதலான பாவங்களை நீக்கும். (வலது காதில் மட்டும் அணிய வேண்டும்)

ஏழு முகமுடையது மன்மத ஸ்வரூப ருத்ராட்சம், பொன் முதலியவற்றை திருடிய பாவத்தை போக்கும்.

எட்டு முகமுடையது விநாயக ஸ்வரூபம்: அன்னம், பொன் போன்றவற்றைத் திருடுதல், கெட்ட குலப் பெண்களைப் புணர்தல், குரு பத்தினியுடன் புணர்தல் முதலிய பாவங்களை நீக்கும்.

ஒன்பது முகமுள்ளது பைரவர், புத்திமுத்திகளைத் தரவல்லது. நூறு கொலைகளை செய்த பாவத்தை நீக்கும்.

பத்து முகமுள்ள விஷ்ணு ஸ்வரூப ருத்ராட்சம் கிரக தோஷங்களையும், பூத, வேதாள, பைசாச பிரம்ம ராக்சதர் தொல்லைகளையும், பாம்பு விஷத்தையும் நீக்கவல்லது.

பதினொரு முகமுள்ளதை தலையில் அணிய வேண்டும். இது ஆயிரக்கணக்கான அஸ்வமேத, வாஜபேய, கோதானப் பலன்களைத் தரக்கூடிய ருத்ர சொரூபமாகும்.

பன்னிரண்டு முகமுள்ளது பன்னிரண்டு ஆதித்யர்களின் சொரூபம். கோமேத, அஸ்வமேத யாகப் பலன்களைத் தரும். ஆயுதம் தரித்தவர்களாலும், கொடிய மிருகங்களாலும் உண்டாகும் பயத்தைப் போக்கும். இதைக் காதுகளில் அணிய வேண்டும்.

பதிமூன்று முகமுடையது சண்முகக் கடவுளுக்கு ஈடானது. தாய், தந்தையரையும், சகோதரர்களையும் கொலை செய்த பாவம் நீங்கும். சகல இஷ்டங்களையும், சித்திகளையும், போகபாக்யங்களையெல்லாம் கொடுக்கும்.



பதினான்கு முகமுடைய ருத்ராட்சத்தை அணிபவர் சிவபெருமானுக்கு இணையாக தேவர்களால் போற்றப்பட்டு, மோக்ஷமடைகிறார்கள்.

ருத்ராட்சம் அணிந்தவரே பரகதியை அடையும் பேறு பெற்றவர்.

ருத்ராட்சங்களை பக்தி சிரத்தையுடன் அணிய வேண்டும். பிராமணர்கள் அதற்குரிய வேத மந்திரங்களான "ஈசானஸ் சர்வ வித்யானாம்", "திரியம்பகம் யஜாமஹே" என்று தொடங்கும் மந்திரங்களை ஜபித்துக் கொண்டே தான் சிரிசில் அணிய வேண்டும். காதுகளில் தத்புருஷ மந்திரத்தையும், நெற்றி, மார்பு (இதயம்) ஆகியவற்றில் அகோர பீஜ மந்திரத்தையும், வயிற்றில் வாமதேவ மந்திரத்தையும், மற்ற அங்கங்களில் அந்தந்த அங்கங்களுக்குரித்தான மந்திரங்களையும் ஓதியபடி அணிய வேண்டும்.

மனித சரீரத்தில் உள்ள ஒன்பது துவாரங்களிலும் அழுக்கு, கழிவுகள் தங்கியிருப்பதால் நன்றாக ஸ்நானம் செய்ய வேண்டும். அதனால் புணரக்கூடாத பெண்களோடு புணர்ந்த பாவமும், தானம் வாங்கிய பாவமும், ரகசியமாக செய்த பாவங்களும் விலகிவிடும். நீரிலிருந்து வெளியேறியவுடன் ரிஷிகளுக்கும், முன்னோர்களான பித்ருக்களுக்கும் எள் கலந்த தண்ணீரால் தர்ப்பணம் செய்து விட்ட பிறகே விபூதி,

ருத்ராட்சம் அணிய வேண்டும். பிறப்புத் தீட்டு, சாவுத் தீட்டு மற்றும் திவசதின காலங்களில் ருத்ராட்சம் அணியக் கூடாது. "சூதகே மிருதகே சைவ ருத்ராட்சம் நதுதாரயேத்" என்பது சாஸ்திர வாக்கியம்.

வசியம், பில்லி சூனியம், மாந்திரீகம், ஏவல், கண் திருஷ்டி முதலியவைகளும், பேய், பிசாசு, பழிவாங்க காத்திருக்கும் ஆவிகளும் சிவனின் சின்னமான ருத்ராட்சத்தைக் கண்டவுடன் ஓடிவிடும். அதனால் தான் தாய்மார்கள் குழந்தைகளுக்கு கழுத்தில், சிவப்பு பட்டு நூலில் கோர்த்து ருத்ராட்சத்தை அணிவிக்கிறார்கள்.

அக்னி, வருணன், நவக்கிரக தேவர்கள் வாயு முதலானோர் வலது காதில் வசிப்பதால் தாழ்ந்தவனோடு பேசினாலும், பொய் சொன்னாலும் தும்மினாலும், எச்சில் உமிழ்ந்தாலும் வாந்தி எடுத்தாலும் பிரணவத்தைச் சொல்லிக் கொண்டு வலது காதைத் தொட்டால் சரீர சுத்தியாகும். அதனால் தான் சந்தியாவந்தனம், ஜபங்கள் செய்யும்போது வலது காதை அடிக்கடி தொட்டுக் கொள்கிறோம்.

ருத்ராட்சத்தை அணிந்து கொள்ளும் உரிமை பிராமணர் முதலிய நால்வகை வர்ணத்தார்களுக்கும் பிரம்மச்சாரிய, இல்லறத்தார், வானப்பிரஸ்தர் சந்நியாசி என்ற நால்வகை ஆசிரமிகளுக்கும் உண்டு.

காணக்கூடாததை காண்பதாலும், கேட்கக் கூடாததைக் கேட்பதாலும், முகரக்கூடாததை முகர்வதாலும், சொல்லத் தகாததைச் சொல்வதாலும் எண்ணக் கூடாததை எண்ணுவதாலும், நம்பிக்கைத் துரோகம் செய்வதாலும், முறையில்லாத மங்கையரைப் புணர்வதாலும் கொடுக்கக் கூடாததைக் கொடுத்ததாலும் ஏற்படும் பாவமும், ருத்ராட்சத்தை விதிப்படி அணிவதால் விலகும்.



ருத்ராட்சம் அணிந்தவனுக்கு அன்னம்பாலித்தால், அது சிவபெருமானுக்கு அளித்த உணவேயாகும். சிவனடியார்களுக்கு ஆடைகளையும் தான்யமும் அளித்தவன் அனைத்துப் பாவங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறான்.

சூரிய, சந்திர கிரகண காலங்கள், தமிழ்ப் புத்தாண்டு தினமான சித்திரை முதல் நாள், உத்திராயணம் மற்றும் தட்சிணாயன புண்யகாலங்கள், அமாவாசை, பௌர்ணமி போன்ற புண்யதினங்களில் ருத்ராட்சம் அணிந்தால் எல்லாப் பாபங்களும் நீங்கும்.

நீத்தார்களான நம்முன்னோர்களுக்கு திதி தர்ப்பணம் செய்யும் நாளில் (சிரார்த்தம்) ருத்ராட்சம் அணிந்தவர்களுக்கு சிறப்பான உணவை பக்தியுடனும், அன்புடனும் அளித்தால் பித்ருக்கள் திருப்தி அடைந்து நம்மை வாழ்த்துவார்கள்.

ருத்ராட்ச மணிமாலைகளைக் கொண்டு ஒருவர் நூறு முறை சிவநாமத்தை ஜெபித்தால் ஆயிரம் முறை ஜபித்த பலன் அடைவார் என்று சிவ புராணம் சொல்கிறது.

ருத்ராட்சத்தின் மேல்பகுதி பிரம்மாவாகவும், கீழ்பகுதி விஷ்ணுவாகவும், குண்டு வடிவமான

நடுப்பகுதி ருத்ரனுமாகவும் உள்ளது. மும்மூர்த்தி வடிவமாக உள்ள ருத்ராட்சம் சகல சௌபாக்யங் களையும் இறுதி நாளில் மோட்சத்தையும் நல்கும் பெரிதாக உள்ள மணிகளே அதிகம் ஆற்றல் வாய்ந்தவை.

ருத்ராட்சத்தை சிவப்பு பட்டுநூல் (அ) தங்கம் வெள்ளி, தாமிரத்திலான கம்பியால் மட்டுமே கோர்த்துக் கொள்ள வேண்டும். இதை புனிதப்படுத் தப்பட்ட நீராலும், சந்தன நீராலும், விபூதிக் குளியலாலும், சிவசக்தி மந்திர உச்சாடனத்துடன் இறைவர் பாதத்தில் வைத்து புனிதப்படுத்த வேண்டும் சிவாலயத்தில் சிவதீட்சை பெற்ற அர்ச்சகர், குருக்கள் ஐயா மூலம் கர்பக் கிருஹத்தில் வைத்துப் புனிதப்படுத்தலாம்.

ஜாபாலோபநிஷத் ருத்ராட்சம் அணிந்தவன் பாவம் செய்தாலும் மன்னிக்கப்படுகிறான் என்று பறை சாற்றுகிறது.

புருஷர்களில் விஷ்ணுவும், நவக்கிரஹங்களில் சூரியனும், நதிகளில் கங்கையும், மகரிஷிகளில் காஸ்யபரும், தேவிகளில் கௌரியும், கடவுளர்களில் மகாதேவரும், குதிரைகளில் உச்சைஸ்வரமும் மணிகளில் ருத்ராட்சமணியும் ஈடில்லா சிறப்பு பெற்றவை.

பிராமணனோ, சண்டாளனோ, குணமுள்ளவரோ யாராக இருந்தாலும், விபூதி ருத்ராட்சங்களை



அணிவதால் பரிசுத்தமடைந்து சிவத்தன்மை அடைகிறான்.

வியாபாரியின் ருத்ராட்ச மூட்டையை சுமந்து கொண்டு சென்ற ஒரு கழுதை அதன் பளுதாங்க முடியாமல் கீழே விழுந்து இறந்து விட்டது. ருத்ராட்சத்தை அணியாமல், அதன் மூட்டையை மட்டும் சுமந்த காரணத்தினாலேயே அது சிவலோகம் சென்று சிவசாருப்யத்தை அடைந்தது.

கோசல தேசத்தில் குணநிதி என்ற அந்தண வாலிபன் இருந்தான். அவன் பேரழகனாகவும், பெண்களைக் கவரும் வசீகரமுள்ளவனாகவும் விளங்கினான். வேதங்களைக் கற்றுணர்ந்த மேதையாகி, யாகங்கள் செய்து தீட்சிதர் என்ற பட்டமும் பெற்றான்.

அவன் தன் குருவின் பத்தினியான முக்தாவளியை தன் வாலிப கம்பீரத் தோற்றத்தாலும், அழகினாலும் மயக்கி இவன் மேல் காம இச்சை கொள்ள வைத்து, பல நாட்கள் அவளிடம் கூடி சுகம் அனுபவித்தான். குருவுக்கு விஷயம் தெரிந்தால், பயங்கரமான சாபம் கிடைத்துவிடுமோ என அஞ்சி அவரை விஷம் வைத்து கொன்று விட்டான். நிம்மதியாக பல காலம் அம்மையாருடன் கலவி இன்பத்தை அனுபவித்தான். இந்த விஷயம் அறிந்து, கண்டித்த பெற்றோர்களையும் விஷம் வைத்துக் கொன்று விட்டான்.

பூர்வீக சொத்துக்கள் அனைத்தும் கரைந்து விட்ட நிலையில், மற்ற பிராமணர்களின் வீடுகளில் திருட ஆரம்பித்தான்; குடிகாரனாகவும் மாறினான். இதனால்

ஆத்திரமடைந்த பொதுஜனங்கள் அவனையும், முக்தாவளியையும் ஊரை விட்டே அடித்துத் துரத்தி விட்டார்கள். அதனால் காட்டில், மோகாந்தக்காரி குருபத்தினியுடன், வாழ வேண்டியதாயிற்று. அங்கும், காட்டின் வழியே செல்லும் அந்தண யாத்ரீகர்களையும் தாக்கி அவர்களுடைய பொருள்களை எல்லாம் கொள்ளையடித்தான்.

அவன் ஆயுட்காலம் முடியும் நிலையில், ஒரு ருத்ராட்ச மரத்தடியில் விழுந்து இறந்து விட்டான். இயம தூதர்கள் அவனை நரக லோகத்திற்கு இழுத்துச் செல்ல வந்தபோது, சிவகணங்கள் அவர்களை மறித்து, 'இவன் ருத்ராட்ச மரத்தடியில் மரித்ததனால் சிவலோகம் அடைய தகுதியாகிவிட்டான்," எனக் கூறி அவனுக்கு அழகிய திருமேனி தந்து, விமானத்தில் ஏற்றிக் கொண்டு சிவனாரிடம் ஒப்படைத்தார்கள்.

ருத்ராட்சத்திற்கு சிறந்த மருத்துவ குணங்கள் உண்டு. உலகெங்கிலும் இம்மணிகளைப் பலவிதமாக மருத்துவத்திற்குப் பயன்படுத்துகிறார்கள்.

சைனாவிலும், அமெரிக்காவிலும் அக்குப்ரஷர் சிகிச்சைக்கு ருத்ராட்சத்தையே உபயோகிக்கிறார்கள்.

ருத்ராட்சத்தை கல்லில் உரைத்துச் சாப்பிட்டு (அ) அவைகளை தண்ணீரில் இரவு முழுவதும் ஊர வைத்து காலையில் குடித்தால், கபம், வாதம், பித்தம் முதலியவை நீங்கும். தொண்டைசளி வெளியேறும். இதை வெதுவெதுப்பான நீரில் 12 மணி நேரத்திற்கு



மேல் ஊர வைத்து அந்த நீரை குடித்தால் கல்லீரல் நோய், இரத்த அழுத்தம், சிறுநீரக கோளாறு, இதயம் சம்பந்தப்பட்ட நோய்கள், வாதம், காது இரைச்சல் எல்லாம் குணமாகும்.

இதன் இலைகள், பட்டைகள், மரத் தூள்கள், வேர்கள், பூக்கள் என அனைத்தும் மருத்துவ குணமுள்ளவை.

ருத்ராட்சத்திலிருந்து தைலம் எடுக்கும் முறையை சிவ சித்த வைத்யர்கள் அறிந்திருக்கிறார்கள். இத்தைலம் மூலம், இளநரை, முடி உதிர்தல், பொடுகு முதலிய நோய்களையும் குணப்படுத்துகிறார்கள்.

இதை உடைத்து பொடியாக்கி சந்தனக் கல்லில் வைத்து விழுது போல் அரைத்து, அத்துடன் கரும்புச்சாறு, கருமண், மிகவும் நுண்ணிய இரும்புத் துகள்கள் கலந்து மண்சட்டியிலிட்டு பூமியில் புதைத்து ஒரு மண்டலம் புடம் போட்டு, தலையில் தேய்த்து, ஊறிய பின் குளித்து வந்தால் நாளடைவில் தலை நரை மாறி கருப்பாகிவிடும். இதையெல்லாம் சித்த வைத்தியர்கள் மூலம் கற்றுக் கொள்ள வேண்டும்.

இக்கொட்டைகளிலிருந்து மின் அலைகள் வெளிப்படுவதால் ரத்த ஓட்டத்தைச் சரிப்படுத்தி, ரத்த அழுத்தத்தை சீராக்குகிறது. இதே காரணத்தினால் தான் ECG, ECHO எடுக்கும்போது ருத்ராட்சமாலையை எடுத்து விடச் சொல்கிறார்கள்.

ருத்ராட்சம் சிவபெருமான் மனித குலத்துக்கு கொடுத்த வரப்பிரசாதமாகும். ருத்ராட்சம் சிவச் சின்னங்களிகல் மிகவும் முக்கியமானது. ருத்ராட்சத்தை உலக நாடுகள் அனைத்துக்கும் தந்து சைவம் பெருமையடைகிறது.

ருத்ராட்சத்திலும் சில வியாபாரிகள் மாற்றம் செய்து ஏமாற்றுகிறார்கள். இதன் கோடுகளை செந்தூரமும், சுண்ணாம்பும் சேர்த்த கலவையால் மறைத்துவிட்டு, தன் விருப்பத்திற்கேற்ப முகங்களை மாற்றுகிறார்கள். இதன் மேல் கத்தியால் கீறி, உருவங்களை வரைந்து அதிக விலைக்கு விற்கிறார்கள்.



# 3. வில்வம்

இந்துக்கள் மிகவும் புனிதமாக கருதும் மரங்களில் முதன்மையானது வில்வம். புனிதமாக கருதப்படும் மற்ற மரங்கள் அரசு, வன்னி, அத்தி, பாதிரி, மா, வேம்பு முதலியன.

வில்வ மரத்துக்கு ஆங்கிலத்தில் ஏகல்மார்மலோஸ் என்றும், இந்தியில் பேல் என்றும் சம்ஸ்கிருதத்தில் ஸ்ரீவிருட்சம் என்றும் பெயர். தமிழில் இதற்கு சிவத்துருமம், கூவிளம் என்றும் பெயர்கள் உண்டு.

வில்வம் குறிப்பாக இந்தியா, பர்மா, இலங்கை மற்றும் ஆசிய கண்ட தேசங்களிலேயே அதிகம் காணப்படுகிறது. கங்கை சமவெளி மற்றும் இமயமலை அடிவாரங்களில் செழிப்பாகவும், பெரியதாகவும் வளர்கிறது. தென்னிந்தியாவில் சுமாரான உயரத்துடன், நன்கு வளர்கின்றன. இவைகள் அதிகபட்சமாக 4 அடி சுற்றளவும், 30 அடி உயரமும் வளரும் முட்கள் நிறைந்த மரம். இம்மரங்கள் அதிக வளைவுகள் இல்லாமல் நேராக நிமிர்ந்திருக்கும்.

இம்மரம் மகாலட்சுமியின் வாசஸ்தலமாகும். இதன் பழம் ஸ்ரீபலம் அதாவது லட்சுமி பழம் எனவும்

போற்றப்படுகிறது. (ஸ்ரீ என்றால் லட்சுமி என்று பொருள்).

வில்வத்தை பார்த்தால் புண்ணியமென்றும், தொட்டால் பாபம் நாசம் அடையும் என்றும் வில்வாஷ்டகம் சொல்கிறது.

மகாலட்சுமி பாற்கடலில் உதித்த நேரமாகிய வெள்ளிக்கிழமை பிரதோஷ காலத்தில் சிவன் கோயிலில் உள்ள வில்வ மரத்தடியில் அமர்ந்து லட்சுமியை ஸ்தோத்திரம் செய்தால், வறுமை நீங்கும், பொருளாதாரத்தில் முன்னேற்றம் தெரியும். அவள் பாற்கடலில் தோன்றியபோது அவளின் கைகளில் வில்வம் இருந்ததாக புராணங்கள் கூறுகின்றன.

வில்வ மரத்தை வீட்டின் முன்பக்கத்தில் நட்டு வளர்த்தால் அந்த வீட்டை தீயசக்திகள் அணுகாது; வளமை கூடும். ஆரோக்கியத்திற்கும் நல்லது. காலையில் கண் விழித்ததும் வில்வ மரம் கண்ணில் பட்டால் ந;ல்ல சகுனம்.

இம்மரம் கடினமானதாகையால் வீட்டின் மேல் உத்திரமாகப் பயன்படுத்துவர். விபூதி தயாரிக்க இக்கட்டைகளை எரித்து அதன் சாம்பலைப் பயன்படுத்துவர். புனிதமானதால் இதை வாசற்கால் செய்யப்பயன்படுத்த மாட்டார்கள்.

சிவபெருமான் தன் மனதினால் சிருஷ்டி செய்ததே வில்வ மரமாகும்.



மக்களின் பாபங்களை நசிப்பதற்கும், அவர்களைத் தூய்மைப்படுத்துவதற்கும் அவரால் தோற்றுவிக்கப் பட்ட இம்மரம் அனைத்து மரங்களிலும் மிகவும் சிறந்ததும், புனிதமானதுமாகும்.

வில்வத்தின் மூன்று தளங்களில் பிரும்மா, விஷ்ணு ருத்ரன் இருப்பதால் அதை தொட்டமாத்திரத்திலும், அர்ச்சனை செய்வதாலும் மும்மூர்த்திகளையும் வழிபட்ட பலன் கிடைக்கும்.

வில்வ மரத்தின் வேரில் பிரம்மாவும், நடுபகுதியில் விஷ்ணுவும், உச்சிப் பகுதியில் சிவனும் வசிக்கிறார்கள். ஆதலால் ஒரே ஒரு வில்வ தளத்தால் சிவனை வணங்கினால் மும்மூர்த்திகளையும் போற்றிய பலனும் புண்ணியமும் கிடைக்கும்.

பகவத் கீதையில் வில்வ பத்திரத்தாலும், புஷ்பத்தாலும், நீராலும் பரம்பொருளைப் போற்றி வணங்கினால் அவர் மகிழ்ச்சி அடைகிறார் என்று ஸ்ரீகிருஷ்ணர் உபதேசிக்கிறார். அதனால் தான் சிவ பக்தர்கள் வில்வ பத்திரத்தை சிவனடியில் சமர்ப்பிக்கிறார்கள்.

மூன்று தளங்களும் சிவனாரின் முக்கண்களைக் குறிக்கும்.

திருக்கயிலையில், பராசக்தி தினமும் சிவனாரை வில்வ இலைகளால் பூஜிக்கிறாள். அதனால் மக்கள் அனைவரின் ஆசைகளையும், நிறைவேற்றி, துன்பங்களையும் துடைக்கிறாள்.

சிவபெருமானால் மானசீகமாக உருவாக்கப்பட்ட தாவரம் என்பதாலும், அதன் தளங்களில் பிரும்மா, விஷ்ணு, ருத்ரன் வசிப்பதாலும், இதை முப்பெரும் தேவியரான சரஸ்வதி, லட்சுமி, சக்தியும் போற்று கிறார்கள்.

தசரா துர்க்கா பூஜையில் இம்மரத்தை வணங்குவது முக்கியமாக இருக்கிறது. சிவ – சக்தி வழிபாட்டிற்கு இன்றியமையாததாகிறது.

வில்வ இலையிலிருந்து தயாரிக்கப்படும் தாயத்துக்கள் தெய்வீக சக்தி வாய்ந்ததாகவும் துஷ்ட தேவதைகளையும், பில்லி சூனியம், ஏவல், திருஷ்டி முதலியவற்றையும் விரட்டி அடிப்பதாகவும் இருந்து , அணிபவர்களை காப்பாற்றுகின்றன.

வில்வ இலையைக் கையில் வைத்துக் கொண்டு சத்திய பிரமாணம் (உறுதிமொழி) செய்தால் அது மீற முடியாத அளவிற்குப் புனிதமானது.

திருமால் வழிபாட்டு முறையில் கையினாலும், விரல்களாலும் செய்யப்படும் முத்திரைகளுக்கு வில்வ முத்திரை என்று பெயர்.

திருமகள் தன்னுடைய நான்கு கரங்களில் ஒன்றில் வில்வப் பழத்தை வைத்திருக்கிறாள். இது ஆரோக்கியத் திற்கு நன்மை செய்வதாகவும், மோட்சத்தைக் குறிப்பதாகவும் ஆன்மீக வாழ்க்கைக்கு உதவும் மகோன்னதமான பழமாகவும் உள்ளது.



திங்கட்கிழமை, சதுர்த்தி, பவுர்ணமி, சிவராத்திரி போன்ற முக்கிய தினங்களில் சிவ பெருமானை வில்வ தளத்தால் போற்றிப் பூஜித்தால் சிவனார் மனம் குளிர்ந்து வேண்டிய வரத்தை அளிப்பார்.

எவன் வில்வ பத்திரத்தால் சிவபிரானை பூஜிப்பானோ அவன் பரிவாரங்களுடன் சிவபிரானின் பாதக்கமலங்களை அடைகிறான்.

காட்டில் வேட்டையாடி களைப்படைந்த வேடன் ஒருவன், சூரிய அஸ்தனமாகி, இருள் கவ்வியதால், வெளியேற முடியவில்லை. காட்டு மிருகங்கள் கூட்டமாக வந்து தாக்குமோ என்று பயந்த அவன், அருகில் இருந்த மரத்தின் மீது ஏறி அதன் கிளையின் மேல் அமர்ந்து விட்டான். அது ஒரு வில்வ மரம். கண்ணயர்ந்தால், கீழே விழுந்து விடுவோமோ என்ற அச்சத்தில், தூக்கத்தைப் போக்க மரத்தில் இருந்த இலைகளை ஒவ்வொன்றாகப் பறித்து கீழே போட்டுக் கொண்டிருந்தான். அந்தப் பத்திரங்கள், வில்வ இலைகள், மரத்தினடியில் இருந்த சிவலிங்கத்தின் மேல் விழுந்தன. அன்று சிவராத்திரி தினம். தெரிந்தோ தெரியாமலோ வேடன் போட்ட இலைகள் அர்ச்சனைப் பத்திரங் களாகி, சிவனாரை மகிழ்வித்தது. அவன் சிவகதி அடைந்தான்.

அகில உலகெங்கிலும் உள்ள அனைத்து ஜீவன்களுக் கும், புழு, புல், பூண்டு உட்பட அனைத்துக்குமே தந்தையான சிவபெருமான், அவைகளை காப்பாற்று வதற்காக, வில்வ மரத்தை மானசீக படைக்கும்போதே,

ஏராளமான மருத்துவ குணங்களுடனேயே படைத்தார். ஆகவே, இம்மரத்தின் ஒவ்வொரு பாகமும் சர்வ ரோக நிவாரணியாக விளங்குகிறது. அதன் மருத்துவ குணங்களைப் பற்றியும், உபயோகிக்கும் முறைகளைப் பற்றியும் வைத்தியர்கள் விளங்குகிறார்கள்.

**இலை:** சிவனின் முக்கண்களைக் குறிக்கும் மூன்று தளங்களைக் கொண்டது. இதன் மூன்று தளங்களும் இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியா சக்தியைக் குறிப்பதாகவும், இதனமைப்பு திரிசூலத்தை ஒத்திருப்பதாகவும் வர்ணிக்கப்படுகிறது.

இதன் சாற்றை தானியங்கள் மேல் தெளித்து வைத்தால் பூசாணம் பிடிக்காமல் இருக்கும்; விதை - தானியங்களை பாதுகாக்க வல்லது. ருசியுள்ளதாக இருக்கும். இதிலிருந்து எண்ணெய் எடுக்க முடியும். தினமும் காலையில் ஏழு அல்லது எட்டு வில்வ தளங்களை மென்று விழுங்கினால் நீண்ட கால இருமல், மார்ச்சளி, நெஞ்சில் கபம் சேர்த்தல், ஆஸ்துமா, ஒவ்வாமை போன்ற வியாதிகள் குணமாகும். சிவப்பு அணுக்களை அதிகளவில் உற்பத்தி செய்யும். அஜீரண வாயுக் கோளாறுகள் குணமாகும்.

**பூ:** இது தேன் நிறைந்தது. தேனீக்கள் மொய்க்கும். இதன் தேனில் நாட்டு மருந்துகளைக் குழைத்து சாப்பிட பலன் அதிகம்.

**பிஞ்சு:** பிஞ்சு காய்கள் துவர்ப்பானவை. இதை அரைத்து எருமைத் தயிரில் கலந்து குடித்தால் சீதபேதி வயிற்றுப் போக்கு கட்டுப்படும்.



**பழம்:** பழமும் சீதபேதி, வயிற்றுப் போக்குக்கு நல்லது. இதன் கூழை நல்லெண்ணெயில் கலந்து, ஊற வைத்து சரீரத்தில் தேய்த்து குளித்தால் சரும நோய்கள் குணமாகும். தோல் மிருதுவாகி பளபளப்பாகும். ஜாம், இனிப்பு பானங்கள் தயாரிக்கலாம்.

நன்றாக பழுத்து, மஞ்சள் நிறம் பரவி தானாகவே கீழே விழும் பழம் நல்லது. உடைத்தால் உள்ளே பிசின் கலந்த விழுது இருக்கும். இதை வெல்லத்திலோ அல்லது மோரிலோ கலந்து சாப்பிட்டால் குடல்புண் குணமடையும். கல்லீரல், கணையம் மற்றும் சிறுநீரகங்கள் பலமடையும். ஆண்களுக்கு வீரிய விருத்தி உண்டாகும். ஆண்மலடு நீங்கும்.

**ஓடு:** இதை லேசாக நெருப்பில் வாட்டி உடைத்து உள்விழுதை தலையில் தடவிக் கொண்டு சிறிது நேரம் ஊறிய பின் குளித்தால் சூடு குறையும். கண் எரிச்சல் நீங்கும். பொடுகு நீங்கி கேசம் நன்கு வளரும். முடியின் வேர்க்கால்கள் பலப்படும். உடல் முழுவதும் தடவிக் கொண்டால், தோல் சுத்தமாகும். அரிப்பு நீங்கும். இதில் பாஸ்பரஸ், நியாசின் உள்ளது. நியாசீன் ரத்தக் கொழுப்பைக் கட்டுப்படுத்தும்.

**விதை:** இதிலிருந்து எண்ணெய் எடுக்கலாம். இது முடி வளர்ச்சிக்கும், பூச்சிகளை ஒழிக்கவும் உபயோகிக்கலாம். விதைகளை அப்படியே கடித்து தின்றால் ஆண்களுக்கு வீரிய விருத்தி உண்டாகும்.

*மரப்பட்டை:* இதை இடித்து செய்யப்பட்ட கஷாயம் காய்ச்சலை குறைக்கும். நெஞ்சுவலி, மூச்சடைப்பு ஆகியவற்றையும் குணப்படுத்தும். இதை இடித்து தண்ணீரில் கலந்து தெளித்தால் ஈ, கடுகுவண்டு, கொசு போன்றவற்றை விரட்டிவிடும்.

**வேர்:** இதன் வேரை நன்றாகப் பொடி செய்து தண்ணீரில் போட்டு கொதிக்க வைத்து, பசும்பாலுடன் சேர்த்து அன்றாடம் காலையில் குடித்து வந்தால் ஆண்மை அதிகரிக்கும்.

**பொது:** வில்வம் குளிர்ச்சியூட்டும் குணமுடையது. உடல் சக்திகளை அதிகரிக்கவும், சேமிக்கவும் உதவுகிறது. இது பெருமான் அளித்த மகத்தான பரிசு.

ஆனாலும், விபூதி, ருத்ராட்சத்தைப் போல், காட்டுத் தழைகளை வில்வ தளம் எனக் கூறி கோயில் வாசல்களில் விற்கிறார்கள்.



# 4. திரிசூலம் (TRIDENT)

திரிசூலம் சிவச்சின்னங்களில் மிகவும் பெருமை வாய்ந்ததும், புனிதமானதுமாகும். இது ஒரு ஆயுதமாகவும், வளமையைத் தரும் மங்கலச் சின்னமாகவும், உபயோகிக்கப்படுகிறது. உலகெங்கிலும் அனைத்து நாடுகளிலும் 3,000 ஆண்டுகளுக்கு மேல் இது போர்ச் சின்னமாகவும் நாடுகளின் தேசியக் கொடிகளிலும் இடம் பெறுவதுமாகவும் உள்ளது.



கிரேக்க மற்றும் ரோமானிய கடல் தெய்வமான போசிடோன் என்ற நெப்ட்யூன் இதை கையில் ஏந்தியவராக வர்ணிக்கப்படுகிறார். இவர் சூலாயுதத்தினால் பூமியைக் கிளறி, நீராதாரத்தை உருவாக்குவதாகவும், சீற்றமடையும்போது இதனால் பூமியைக் குத்தி பூகம்பங்களையும், சுனாமிகளையும், கடலில் புயலையும் உண்டாக்குவதாகவும் கூறப்படுகிறது.

திரிசூலம் தேவலோகத்தில் மிகவும் உயர்ந்த அதிகாரச் சின்னமாகவும்,

தேவர்களையும், ஆவிகளையும் வரச் சொல்லி உத்தரவிடும் மணிஒலியாகவும் தாவோமதத்தில் கருதுகிறார்கள். இதில் உள்ள மூன்று கூரான முட்கள் மூன்று பரிசுத்தமான முப்பெரும் தெய்வங்களையும் குறிப்பதாகக் கருதுகிறார்கள்.

TRIDENT என்றால் மூன்று பற்களை உடையது என்றும், திரிசூலம் என்றால் மூன்று முட்களை உடையது என்றும் பொருள் கொள்கிறார்கள். சமஸ்கிருதத்தில் உள்ள "திரிதந்த" (மூன்று பற்கள்), திரிசூல (மூன்று முட்கள்) என்ற வார்த்தைகளே இதற்கு ஆதாரம்.

கிரேக்க மொழியில் Ps1 என்ற எழுத்து திரிசூலத்தை ஒத்திருக்கிறது. ரோமானிய மொழியில் திரிசூலம் என்ற வார்த்தை சிலுவையையும் குறிக்கும்.

உக்ரேன் நாட்டின் ரூரிக் இராஜவம்சத்தினர் இதை துணியால் செய்த, மணிக்கட்டில் (Coat of Arms) அணிந்து கொள்ளும் கவசத்தில் தங்களின் சின்னமாக வரைந்து கொள்கிறார்கள்.

பார்படோஸ் நாட்டின் கொடியில் இதை தேசிய சின்னமாக வைத்திருக்கிறார்கள்.

தாய்லாந்து நாட்டு இராமாயணத்தில் அனுமார் கையில் சூலாயுதம் ஏந்தியிருப்பதாகச் சித்தரிக்கிறார்கள். அந்நாட்டின் சக்ரி ராஜவம்சத்தினர், திரிசூலத்தையும் அதனடியில் சுதர்ஸன சக்ரத்தையும்



பதித்து அதை "சக்ரி" சின்னமாக தன் வம்சத்திற்கு வைத்துக் கொண்டார்கள்.

அமெரிக்க கடற்படையின் போர்ச் சின்னத்தில் இது கடல், பூமி, ஆகாயம் என்ற மூன்று அம்சங்களாக (US Navy Seal) விளங்குகிறது.

புத்தர்களின் சின்னமான திரிரத்னாவை இது ஒத்திருக்கிறது. "அருண்வாட்" என்கிற பௌத்த விஹாரின் உச்சியில் 7 முட்கள் கொண்ட திரிசூலம் உள்ளது.

நேபாளத்தில் ஐக்கிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தேர்தல் சின்னமாக இருக்கிறது.

இந்து சைவ சமய சிந்தாந்த நூல்களில் திரிசூலம் சிவனாரின் முக்கிய ஆயுதமாகக் கூறப்பட்டிருக்கிறது. இது சிவபெருமானே மிகவும் உயர்ந்த ஆட்சியாளர் என்று நிரூபிக்கிறது. இதன் மூன்று முட்கள் போன்ற முனைகள் ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற சிவனாரின் முத்தொழிலையும், கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற கால நிலைகளையும் உணர்த்துகிறது.

இது நம் முன்னோர்களின் வழிவந்த சில தவறான ஆசார சித்தாந்தங்களையும், மனதால் உணர்தல் மற்றும் செயலாற்றுதல் போன்ற தன்மைகளையும் அழித்து அதனால் அத்வைத சித்தாந்தத்தை உணர்த்தி, ஞானமாகிய ஆனந்தத்தை அளிக்கிறது.

திரிசூலம், மனித சரீரத்தில், புருவ மத்தியில் இட பிங்கள, சுஷ்மா என்கிற மூன்று நாடிகளும் மே நோக்கி செல்வதைக் குறிக்கிறது. மூன்று முட்களி நடுவில் உயரமாக உள்ள சுஷ்மா மட்டும் 7வ சக்ரமாகிய சக்தி மையத்தை எட்டுகிறது. மற்ற இ நாடிகளான இட, பிங்கள மத்தியிலேயே முடிந்து நின் விடுகின்றன. உயரத்திலுள்ள 7து சக்கரம் வரையி சுஷ்மா நாடி செல்வதால் தான் நடுமுள், மற் முட்களை விட உயர்ந்திருக்கிறது.

சிவபெருமானிடமிருந்தும், திருமாலிடமிருந்த பெறப்பட்ட இந்த புனித ஆயுதத்தையும் மற்றும் ஆயுதங்களையும் துர்க்கை அம்மன் கையி வைத்திருக்கிறாள்.

உலக நாடுகள் பலவற்றிலுமுள்ள தங்களி நிறுவனங்களுக்கு அவர்கள் ட்ரைடண்ட் என பெயரை வைத்திருக்கிறார்கள். இப்பெயர் கொ நிறுவனங்கள் லாபகரமாகவும், வர்த்தகத் முன்னிலையையும் அடைந்து விளங்குகின்றன.

சைவ மதம் உலகமெங்கும் பரவியிருந் என்பதற்கும், சிவ வழிபாடு நிலவியது என்பதற் இதுவே சான்று.

உலகம் சிவமயம்.



# 5. உடுக்கை (டமரு)

ஒலியும், அதனால் ஏற்படுகிற அதிர்வுகளும் எக்காலத்திலும் அழிவில்லாதவை.

ஒலியும், ஒளியும் அனைத்தும் பிரபஞ்சமாகிற சிவபெருமானிடமிருந்தே வெளிப்படுகின்றன.



அனைத்துக் கோள்களும் நட்சத்திரக் கூட்டங்களும் அவைகளுக்கு விதிக்கப்பட்ட நியதியின்படி, ஒருங்கிணைந்து சீரான ஒழுங்கு முறையாக விண்வெளியில் பயணிக்கின்றன.

தில்லையுட் கூத்தனின் ஆனந்த நடனத்தின் முடிவில் அவரின் உடுக்கையிலிருந்து சாப்பு 14 சப்தங்களாக உதிர்ந்தது. அந்த சப்தங்களை ‘மஹேஸ்வர சூத்திரம்’ என்று வைத்து அவைகளுக்கு நந்திகேஸ்வரர் விளக்கவுரை எழுதினார்.

அந்த சப்தங்கள் பின் வருமாறு:–

1) அ, இ, உண். 2) ருலுக், 3)ஏ, ஓங், 4)ஐ, ஔச், 5)ஹயவரட், 6)லண், 7)ஞமஙணன நம், 8)ஜ பஞ், 9)கடதஷ்,

10) ஜபகடதச், 11) கபசடதசடதவ், 12) சுபய், 13) சஷஸர், 14) ஹல்.

இந்த 14 சப்தங்களே ஈரேழு வியாகிருதிகள். வியாகிருதிகள் என்றால் மந்திரச் சொற்களை உச்சரித்தல் என்று பொருள். இதனால் தான் ஈரேழு வியாகிருதிகளைக் கூறி ஈரேழு உலகினைப் படைத்தார் என்று சொல்கிறோம்.

அந்த ஈரேழு உலகங்களாவன:–

பூமிக்கு மேல்: 1.பூலோகம், 2.புவர்லோகம், 3.சுவர் லோகம், 4.மஹர் லோகம், 5.ஜல லோகம், 6.தபலோகம், 7.சத்யலோகம். (இதைத் தான் ஓம் பூ; ஓம் புவ; ஓம் சுவ: ஓம் மஹ: ஓம் ஜந; ஓம் தப; ஒகும் ஸத்யம் என்று வேதம் உரைக்கிறது.

பூமிக்குக் கீழ்:

1.அதல லோகம், 2.விதல லோகம், 3.சுதல லோகம், 4.தலாதல லோகம், 5.மகாதல லோகம், 6.ரஸாதல லோகம், 7.பாதாள லோகம்.

ஈரேழு உலகங்கள் மட்டுமில்லாது, சிவபெருமானின் இந்த வியாகிருதிகளிலிருந்தே அனைத்து ஜீவராசிகளும், புல், பூண்டு, மரம் முதலிய தாவரங்களும், கல், மலை, நீர் முதலியனவையும் இரும்பு, தங்கம் முதலிய அனைத்து தாதுக்களும், அட்சரங்களும், மொழிகளும், ராகங்களும் தோன்றின.

இந்த வியாகிருதிகள் சமஸ்கிருதத்தில் 51 அட்சரங்களைக் கொண்டது (தமிழில் எழுதினால் அதிகம் வரும்)



இந்த வியாகிருதிளே, 14 எழுத்துக் கூட்டங்களாக வந்தன. இந்த எழுத்துக் கூட்டத்தை முன்னும் பின்னுமாகக் கோர்த்து பாணினி மஹரிஷி (550 BC) இலக்கணம் எழுதினார். பிற்காலத்தில் இது ஒன்பது விதமான இலக்கணமாக உருவெடுத்தது. இதில் ஒன்று தேவேந்திரனால் இயற்றப்பட்ட "ஐந்திரம்" என்ற இலக்கணம்.

இந்த ஐந்திரத்தை அடிப்படையாகக் கொண்டே திருணதூமாக்கனி (தொல்காப்பியர்) தமிழ் இலக்கணமான தொல்காப்பியத்தை இயற்றினார்.

தமிழ் சிவனின் மொழி என்பதற்கு இதுவே சான்று.

உலகப் படைப்பே இந்த 51 அட்சரங்களால் உண்டாகியது எனக் கண்டோம்.

சிதம்பரத்தில் நடராஜரின் தெய்வீக உருவமும் நடனமும் இந்த 51 அட்சரங்களின் அடிப்படையில் அமைந்ததே. அவரின் நடனமே இவ்வுலகத்தின் இலக்கம் என்று வேதம் சொல்கிறது. அதனால் தான் 51 என்கிற எண் ஆன்மீகத்தில் மிக முக்கியமாகக் சொல்லப்படுகிறது. ஜபமாலையில் 51 மணிகளைக் கோர்ப்பது இதன் பொருட்டே!

பாணினி மகரிஷி (கி.மு.550) இந்த 51 அட்சரத் தத்துவத்தைக் கொண்டே நடராஜரின் உருவத்தை ஞான சக்தியால் உணர்ந்து மனதினால் சிருஷ்டித்தார்.

பிற்காலத்தில் நமது நிகரில்லா மாமன்னரான இராஜராஜ சோழர், பாணினியின் உருவகத்திற்கு சிலை

வடிவம் கொடுத்து, சிற்பக் கலை மேதைகள் உதவியுடன் தற்போது அருள்பாலித்துக் கொண்டி ருக்கும் நடராஜர் சிலையைச் செய்வித்தார். அதை தில்லை சித்சபையில் பிரதிஷ்டையும் செய்வித்தார். அதற்கு முன் தில்லை சித் சபையில் விக்கிரகம் ஏதுமில்லை. இவ்வுலகில் நடராஜர் இல்லாத நாடுகள் இல்லை. வியக்காத அறிஞர்கள் இல்லை. இது தமிழனின் சாதனை.

அம்மன் கோயில்களில் பூசாரி உடுக்கை அடித்து அம்மனைப் புகழ்ந்து பாடி, பக்தர்களின் குறைகளை நீக்கும்படி வேண்டுவதைப் பார்த்திருக்கிறோம். பக்தர்களின் வேண்டுதல்கள் நிறைவேற்றப்பட்டு அவர்கள் நலமடைகிறார்கள். உடுக்கை ஒலி பராசக்தியைச் சென்று அடைகிறது; அவளின் அருள் பார்வையை ஈர்க்கிறது.

அதேபோல் குடுகுடுப்பைக்காரன் உடுக்கையை அடித்துக் கொண்டே அதிகாலையில் வீடு வீடுகளாக வந்து நல்வாக்கு சொல்கிறான். அவன் வாக்குகள் பெரும்பாலும் பலிக்கின்றன. மக்களும் அவனுக்கு வஸ்திரங்களையும், உணவுப் பொருட்களையும் கொடுத்து உதவுகிறார்கள்.

உடுக்கை ஒலி தெய்வீகமானது. சிவனாரின் உடுக்கை ஒலி நின்றால் உலகத்தில் சிருஷ்டியும், இயக்கமும் நின்றுவிடும்.



# 6. கழல் (சலங்கை, சிலம்பு)



நமது சிவபெருமான் கால்களில் கழல்கள் அணிந்திருப்பதாகக் காட்சியளிக்கப்படுகிறார். கழல், தண்டை, சிலம்பு, சலங்கை எனவும் அறியப்படுகிறது. வடமொழியில் சலங்கைக்கு சிஞ்சீனி என்று பொருள்.

சிவனார் சிருஷ்டி நிமித்தம், ஆனந்தத் தாண்டவம் ஆடும்போது அவரின் பாதக் கழல்கள் சுழல்கின்றன. அவைகளின் உள்ளே நிரப்பப்பட்டிருக்கும் பரல்கள் இனிய தெய்வீகமான ஒலிகளை எழுப்புகின்றன. ஆனந்தத் தாண்டவத்தினால் பாதங்கள் தரையில் பல விதமாகப் பதியும்போது ஏற்படும் ஒலி, தாளமாக, சாப்பாக அமையுங்கால், அதற்கிணங்க சலங்கைப் பரல்களும் அசைய, இனிய இசைத் த்வனி வெளிப்படுகிறது.

இதைத் தான் பதஞ்சலி ஸ்தோத்திரம் வேது பாடலில் 'ஸாந்த்ரேந்த்ர சாப சிஞ்ஜீனீ கிருதானி லாசினே' என்று சொல்கிறது. அதாவது அனைத்து ரஸங்களுக்கும் தலைவரான பரமேஸ்வரர் நாட்டியம் ஆடுங்கால்

உண்டாகிற பாதத் தாளங்கள், கழல்களை ஒலிக்கச் செய்து, தேவராகங்களை சிருஷ்டிக்கின்றன.

கழல்கள், ரத்த ஓட்டத்தைச் சீராக்கி, ஆரோக்கியத்தைக் காக்கும் ஆபரணமாகவும், தெய்வங்களாலும் அணியப்படுவதாகவும் மதிக்கப்படுகின்றன.

ஔவையார் அருளிச் செய்த ஸ்ரீ விநாயகர் அகவல் ‘சீதக்களபச் செந்தாமரைப்பூம் பாதச் சிலம்பு பல இசை பாட’ என்றே விநாயகரை வர்ணிக்கிறது. இது முழுக்க முழுக்க யோக சூத்திர நூலேயாகும்.

கந்தர் சஷ்டி கவசம் முதல் பாடலிலேயே ‘பாதமிரண்டில் பண்மணிச் சதங்கை கீதம் பாடக் கிண்கிணியாட’ என்று கந்தரை புகழ்கிறது. ‘திருவடியதனில் சிலம்பொலி முழங்க’ எனவும் வர்ணிக்கிறது.

அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ் திருப்பரங்குன்ற பாடலில், ‘உன் சிலம்புங்கனக தண்டையும் கிண்கிணியும் ஒண்கடம் பும்புனையும் அடிசேராய்’ எனவும் திருச்செந்தூரில், ‘தண்டையணி வெண்டையங் கிண்கிணி சதங்கையும் தண் கழல் சிலம்புடன் கொஞ்சவே நின்’ எனவும் வர்ணிக்கப்படுகிறது.

மாணிக்கவாசகப் பெருமான் அருளிய சிவ புராணம் கழல்களை சிறப்பாகப் போற்றி வர்ணிக்கிறது. பிறவிச் சுழற்சியினால் ஏற்படும் துன்பங்களை அருள் மழையால் ஒழிக்கும். ‘பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய் கழல்கள் வெல்க’ என்றும், ‘அன்பில்லாருக்கும்



வெகு தொலை தூரத்திலிருப்போர்க்கும், அருள்பாலிக்கும், மலரென மென்மையான கழல்கள் வெல்க’ என்றும், ‘இரு கரங்களைக் கூப்பி, உள் மகிழ்ந்து வணங்குபவர்களுக்கு மன நிறைவைத் தரும் சிவபெருமானின் ‘பாதக் கழல்கள் வெல்க’ என்றும், சிரம் தாழ்த்தி வணங்குபவர்களை, வாழ்வில் வளம் பெறச் செய்து மேலான நிலைக்கு உயர்த்தும் கழல்கள் வாழ்க’ என்றும் சிவபெருமானின் கருணைமிக்க அருள்பாலித்தலையும் போற்றுகிறது.

துர்க்கை அம்மன் கோயில்களிலும், மாரியம்மன் கோயில்களிலும், பூசாரி சலங்கையை ஒலித்துக் கொண்டே அம்மையிடம் கோரிக்கை வைத்துப் பாடுவதைக் காண்கிறோம். சலங்கையின் தெய்வீக ஒலி பிரபஞ்ச சக்தியான அம்பாளைச் சென்றடைந்து, பக்தர்களுக்கு அருள் கிடைத்து, அவர்களின் குறை நீக்கப்படுவதையும் நாம் நன்கறிவோம்.

கழல் கடவுளின் சின்னம்; புனிதமானது. அணிபவரின் ஆன்ம சக்தியைத் தூண்டி வாழ்வில் மேலான நிலையை அடைய உதவுகிறது.

# 7. இளம்பிறை

இளம்பிறை – மூன்றாம் பிறை சிவபெருமானின் அணிகலன்.

இவர் மகரிஷி அத்ரிக்கும் அவர் பத்தினி அனுசுயாவுக்கும் மகனாகப் பிறந்தார்.



தேவர்களும் அசுரர்களும் சாவாத்தன்மையை அளிக்கும் அமிர்தத்தை அடையும் பொருட்டு பாற்கடலைக் கடைந்தார்கள். மந்தார மலை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பு கயிறாகவும் இயங்க மஹா விஷ்ணு, ஆமையாக மாறி கடலின் கீழ் இருந்து கொண்டு மலையைத் தாங்கினார். அப்பொழுது பாற்கடலில் இருந்து சந்திரன் தோன்றினார். அவருக்கு பின் ஜேஷ்டாதேவி, அவளின் தங்கை மகாலட்சுமி, சூரன், உச்சைஸ்ரைவஸ் என்ற வெள்ளைக் குதிரை, கௌஸ்துபமணி, பாரிஜாதம், காமதேனு, தன்வந்திரி, ஐராவதம் என்கிற வெள்ளை நிற யானை, அழகிய நடன மாதர்களான தாரா மற்றும் ரூமா, சிந்தாமணி



என்கிற ரத்தினக்கல், தேவாமிருதம், ஆலால விஷம் முதலியவை தோன்றின.

சந்திரன் மிகவும் பிரகாசமுள்ளவராகவும், வசீகர தோற்றமுள்ள அழகனாகவும் இருந்ததால் சிவபெருமான் அவரைப் பிடித்து தன் தலையை அலங்கரிக்கும் அணிகலனாக வைத்துக் கொண்டார்.

சிவனாரின் வலது கண்ணான சூரியனும், இடது கண்ணான சந்திரனும் பூவுலகுக்கு வெளிச்சம் தரும் விளக்குகள் என வர்ணிக்கப்படுகிறார்கள்.

முனிவர்கள் ஒருசமயம் பூமாதேவியை சினம் கொண்டு, பசு மாடாக மாற்றி விட்டார்கள். அச்சமயம் சந்திரதேவர், தன்னை கன்றுக்குட்டியாக மாற்றிக் கொண்டு, அப்பசுவின் பாலைக் குடித்ததால் தாய்ப் பசுவுக்கு உபாதை நீங்கியது. இதனால் சந்தோஷமடைந்த பிரம தேவர், சந்திரனை நட்சத்திரக் கூட்டத்திற்கு மன்னராகவும், ஔஷதங்களுக்கு (மருந்து, மூலிகைகளுக்கு) அதிகாரியாகவும் நியமித்தார் என்று அரி வம்சம் என்ற நூலில் கூறப்பட்டிருக்கிறது.

தட்சபிரஜாபதிக்கு 60 பெண்கள். அவர்களில் அஸ்வினி முதல் ரேவதி வரை 27 பெண்களை அவர் சந்திரனுக்கு திருமணம் செய்து வைத்தார். ஆனால், அவர் 27 மனைவியரில் ரோகிணியை மட்டும் நேசித்து தாம்பத்யம் வைத்துக் கொண்டார்; மற்ற 26 பெண்களை உதாசீனப்படுத்தி விட்டார். இதனால் வருத்தம் அடைந்த மற்ற 26 பெண்களும், தங்களின் பிதாவான தட்ச பிரஜாதிபதியிடம், முறையிட, அவர்

சந்திரனை அழைத்து, மற்ற மனைவியரிடமும் பிரியமாக நடந்து கொள்ளும்படி அறிவுறுத்தினார். ஒப்புக் கொண்ட சந்திரன், மற்ற பெண்களின் ஆசையை நிறைவேற்றவில்லை. மறுபடியும் அப்பெண்கள், கண்ணீரும் கம்பலையுமாக, தங்களின் தந்தையிடம் முறையிட, அவர் சீற்றம் கொண்டு அவர் க்ஷயமாகி துன்பப்படும்படி சபித்து விட்டார்.

பிரம்ம தேவர் சந்திரனின் பரிதாப நிலையைக் கண்டு இரக்கமுற்று சந்திரன் மாதத்தில் 15 நாட்கள் க்ஷயமாகவும், (குறையவும்) மற்ற 15 நாட்கள் வளரவும் அருள்புரிந்தார். இந்த நாட்கள் தான் தேய்பிறை, வளர்பிறைக் காலங்கள் எனப்பட்டது.

இவ்வாறாக சந்திரன் காலப் பரிமாணத்தை நாட்களாகவும், பட்சமாகவும், மாதங்களாகவும் கணக்கிட உதவுகிறார். மூன்றாம் நாள் வளரும் சந்திரனை (மூன்றாம் பிறை) சிவபெருமான் தன் தலையில் கிரீடமாக அணிந்து கொண்டார். இதன் மூலம் எல்லாம் வல்ல "காலம்" கூட அவருக்கு ஒரு அணிகலனே என நிரூபிக்கிறார்.

கவிஞர்கள், அகத்திப்பூ பிறைச் சந்திரன் வடிவில் இருப்பதால் சிவனாரை ஆத்திச்சூடி என வர்ணிக் கிறார்கள். (அகஸ்தி, அகத்தியாகி, ஆத்தியாகியது. அகத்தியிலை மற்றும் பூ குடல் உஷ்ணத்தைக் குறைக்கும் ஆற்றலை தரும்; புற்று நோயைக் குணப்படுத்தும்.) இது மருந்துகளுக்கு மன்னரான சந்திரனை ஒத்திருப்பதால், இவ்விதமாக விளங்குகிறது.



சிவபெருமானை நேரில் பார்ப்பது சுலபமல்ல. ஆனால், அவரின் சிரசிலிருக்கும் பிறைச் சந்திரனைப் பார்த்தால், சிவனாரைப் பார்த்ததாகிவிடும்; அவரின் அருளும் கிடைக்கும். ஏழாம் திருமுறையில், "பித்தா, பிறைசூடி பெருமானே! அருளாளா," என சுந்தரமூர்த்தி நாயனார் போற்றுகிறார்.

ஆயிரம் பிறை (மூன்றாம் பிறை) காலத்திற்கு மேல் அதிகமாக நாட்கள் வாழ்ந்தவர்களை, 'சகஸ்ர சந்திர தர்ஷிணி' அதாவது 1000 பிறைகளைக் கண்டவர்கள் எனக் கூறுகிறோம். இவ்வாறு ஆயிரம் பிறை கண்டவர்களை தான் போற்றுவதாக ஸ்ரீ கிருஷ்ணர் தெரிவிக்கிறார்.

ஆயிரம் பிறைகளைக் கண்டு, வணங்கி, வாழ்ந்த வந்திக் கிழவிக்கு சிவனார் அருள்பாலிக்கும் பொருட்டு, பாண்டிய நாட்டு மதுரையில் பிட்டுக்கு மண் சுமந்தார்; வந்திக் கிழவிக்கு முக்தியும் அருளினார்.

விண்ணில் வளர்பிறையில் மூன்றாம் நாள் தோன்றும் பிறைச் சந்திரனைப் பார்ப்பவர், யாவரும் தன்னை அறியாமலேயே மகிழ்கிறார்கள்; வணங்கு கிறார்கள்; அதனால் சிவனருளும் பெறுகிறார்கள். பிறை தரிசனம் செய்தவனின் பாவங்கள் குறை கின்றன; அதனால் வாழ்வில் வளமும், வெற்றியையும் அடைகிறார்கள்.

இந்து சமய புராணங்களிலும், தாந்திரீகத்திலும், பிறையைப் பற்றி கூறப்பட்டுள்ளது. பிறையைத் தலை

அணிகலனாகக் கொண்டவர்கள் சிவ குடும்பத்தினர் மட்டுமே! அவர்கள் சிவன், பராசக்தி (காளியாக, லலிதாவாக, திரிபுரசுந்தரியாக, துர்க்கையாக) அவரின் தங்கை சரஸ்வதி, அம்பிகையின் மகன் விநாயகர் மற்றும் மஹாகாளர், பைரவர். வேறெந்த தெய்வத்திற்கும் பிறை அணிகலன் கிடையாது.

வளர்பிறை காலம் சுபிட்சத்தைத் தரும். அக்காலத்தில் எந்த நற்காரியங்களைச் செய்தாலும் அவை நன்கு வளர்ச்சி பெற்று வளம் தரும்.

மேலை நாடுகளிலும், மத்திய கிழக்கு நாடுகளிலும் பிறையைப் புனிதமாகக் கருதிப் போற்றினார்கள்.

ரோமன் கத்தோலிக்க சிற்பங்களில், அன்னை மேரி மாதா தன் காலடியில் பிறைச் சந்திரனை வைத்திருப்பதாகவும், தலையில் 12 நட்சத்திரங்களைக் கொண்ட கிரீடத்தை அணிந்திருப்பதாகவும் சித்தரிக்கிறார்கள்.

உலோகங்களில் வெள்ளி சந்திரனோடு தொடர்புள்ளதாகவும், வெள்ளிக்குள்ள தன்மைகளை சந்திரன் பெற்றிருப்பதாகவும், ரஸவாத நிபுணர்கள் கருதுகிறார்கள்.

அமெரிக்க ராணுவத்துக்குச் சொந்தமான உணவுப் பார்சல் பெட்டிகளின் மேல் பிறைச் சின்னத்தைப் ஒட்டுகிறார்கள்.

கிரேக்கப் புராணங்களில் அர்டேமிஸ் (டயானா) என்கிற பெண் தெய்வத்துடன் பிறையும் கூறப்பட்டி



ருக்கிறது. கி.மு., ஏழாம் நூற்றாண்டில் தோற்றுவிக் கப்பட்ட கான்ஸ்டான்டிநோபில் நகரத்தில் அர்டேமிஸ் தேவதையாகவும், நகரத்தின் சின்னமாக மூன்றாம் பிறையும் விளங்கியது. பிற்காலத்தில் கி.பி.1453 ஆண்டு ஒட்டோமன் துருக்கியர்கள் கான்ஸ்டான்டி நோபிலைக் கைப்பற்றிய பிறகும் கூட அவர்கள் (துருக்கியர்கள்) பிறைச் சின்னத்தைத் தங்களின் பேரரசின் அதிகாரச் சின்னமாக வைத்துக் கொண்டார்கள்.

மிகவும் புராதன காலத்திலேயே மூன்றாம் பிறையை மனித சமுதாயம் தன்னுடைய புனித சின்னமாகக் கருதியது. பாபிலோனியர்கள் இதைச் 'சின்' என்ற பரலோகத்திற்கும், பூமிக்குமான ஒளிவிளக்கு எனக் கொண்டாடினார்கள். இஸ்லாமியரின் ஆட்சிக்கு முற்பட்ட காலத்திலேயே, தெற்கு அரேபிய, மற்றும் ஆப்ரிக்க நாடான எத்தியோப்பியா நாடுகளின் நாணயங்களிலும் தேசியக் கொடிகளிலும் பிறையும், நட்சத்திரங்களும் பொறிக்கப்பட்டிருந்தன.

ஆதி காலத்தில் கிரேக்கர்களின் காலனி நாடுகளில் பிறை வழிபாட்டுடன், அதை சின்னமாகவும் வைத்திருந்தார்கள். ஒட்டோமன் சுல்தான்களுக்கும், கிரேக்கர்களுக்கும் நடந்த போரில் இரு தரப்பினருமே மூன்றாம் பிறையைத் தன் போர்ச்சின்னங்களில் வைத்திருந்தார்கள்.

பாரசீக நாட்டைக் கைப்பற்றிய முஸ்லிம்கள், மூன்றாம் பிறையை ஏற்றுக் கொண்டதோடு, நாளடைவில் அதைத் தன் மதச் சின்னமாகவும்

வைத்துக் கொண்டார்கள். முஸ்லிம்களின் சாம்ராஜ்ய விஸ்தரிப்பு ஏற்பட்ட இடங்களில் எல்லாம், மேற்கு ஆப்ரிக்காவில் இருந்து, தூரக்கிழக்கு நாடுகள் வரை பிறையின் மகத்துவம் பரவியது. எகிப்திய மன்னர் பாஷா, 1805ம் ஆண்டில் முதல் முதலில் தன்னாட்டின் தேசியக் கொடியை வடிவமைத்தபோது, அதில் 3 பிறைச் சந்திரனையும், 3 நட்சத்திரங்களையும் வைத்துக் கொண்டார்.

கடந்த சில நூற்றாண்டுகளாக நட்சத்திரத்துடன் கூடிய மூன்றாம் பிறை உள்ள கொடிகளை எல்லா இஸ்லாமிய நாடுகளும் உபயோகிக்கின்றன.

உலக நாடுகள் அனைத்திலும் பிறை வளம் தந்து அருள் பாலிப்பதாகவும், புனிதமாகவும் கருதப்படுகிறது. தெரிந்தோ தெரியாமலோ சிவன் போற்றப்படுகிறார். உலகம் சிவமயம் என்பதற்கு இதவே சான்று.



# 8. மழு (பரசு, கோடாலி)

தெய்வச் சின்னங்களில், முக்கியமாக, சிவபெருமானின் ஆயுதச் சின்னமாக மழு விளங்குகிறது. இதை வடமொழியில் பரசு என்றும், தமிழில் கோடாலி என்றும் கூறுவர்.

மழு அனலென ஒளிரும், எவராலும் எதிர்க்க முடியாத தெய்வீக சக்தி வாய்ந்த ஆயுதமாகும்.

தமிழ்ப் பாடல் ஒன்று சிவனாரைப் போற்றும் வகையில்,

"நனவிலும், கனவிலும் நம்பா உன்னை
மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்
புனல்விரி நறுக்கொன்றைப் போதணிந்த
கனல்விரி அனல்புகு கையவனே"

என்று கனலாக எரியும் மழுவைக் கையில் ஏந்தியவனே என்று வர்ணக்கிறது.

தில்லையுட் கூத்தனின், ஆனந்த நடனத்தை விவரிக்கும்போது, "மானாட, மழுவாட, மதியாட, புனலாட மங்கை சிவகாமியாட... என்று நடராஜ பத்து என்ற பாடல் வர்ணிக்கிறது.



இது வீரர்கள் நேருக்கு நேர் போரிடும் போது, இரு கைகளாலும் அல்லது ஒரே ஒரு கையாலும் எதிரிகளை வெட்டிச் சீவப் பயன்படுத்தப்படுகிறது.

இதன் இரு வெட்டு முனைகளும் மிகவும் கூரானதாக இருக்கும். ஒரே ஒரு வெட்டு முனை உள்ள மழுவும் உண்டு. அதன் நுனியில் ஈட்டி போன்ற கூரான முள்ளும் இருக்கும். இதன் கைத்தடி 3 அடி முதல் 5 அடி வரை இருக்கும். சில கோடாலிகள் 7 அடி நீளமுள்ளதாகவும் இருக்கும். இதன் தண்டு இரும்பாலோ, எஃகினாலோ அல்லது மரத்தாலோ கூட செய்யப்பட்டிருக்கும். வழுக்காமல் இருக்க கைப்பிடி தோலினால் மூடப்பட்டிருக்கும்.

ஐந்து வகையான மழுக்கள் உள்ளன. ஐந்தும் வடிவமைப்பில் வேறுபட்டவை.

ஆண் தெய்வங்களான சிவன், கணேசர், நந்தீஸ்வரர் மற்றும் பெண் தெய்வமான பராசக்தி, காளி ஆகியவர்கள் இதை கையில் ஏந்தியவர்களாக



காட்சியளிப்பார்கள். இதற்கு கண்டபரசு என்று பெயர்.

ஒரு சமயம் தக்ஷப் பிரஜாபதி மகாவிஷ்ணுவைத் திருப்தி செய்து, அவரிமிடருந்து வரங்களைப் பெற ஒரு யாகம் செய்தார். அவரின் விருப்பத்திற்கு மாறாக அவரின் மகள் சதி சிவபெருமானை மணந்து கொண்டதால் அவருக்கு சிவனார் மீது கோபம் உண்டாயிற்று. அது பகையாகவும் மாறியது. அதனால் சிவனாரை யாகத்திற்கு அழைக்காமலும், அவருக்கு அவிர்பாகம் அளிக்க மறுத்தும் யாகம் செய்யத் துணிந்தார். இதனால் சீற்றமடைந்த சிவனார், தக்ஷனின் யாகக் குண்டத்தை ஒரு கூரான இரும்புத் தடியை வீசி அழித்தார். அது யாகசாலையை முழுவதுமாக அழித்துவிட்டு, நேராக பத்ரியாஸ்ரமத்தில் தவம் செய்து கொண்டிருந்த நர நாராயணர்களை நோக்கிப் பாய்ந்தது.

அவர்கள் 'ஹூம்'' என்று கூச்சலிட அது திரும்பிவிட்டது. மீண்டும் சீற்றமடைந்த சிவனார் அதை நாராயண மகரிஷி மீது ஏவிவிட்டார். நாராயண மகரிஷி, ஒரு புல்லை சிவனார் மீது ஏவிவிட்டார். அது மழுவாக மாறி சிவனாரைத் தாக்க வந்தது. சிவனார் அதைப் பிடித்து உடைத்து விட்டார். நர நாராயணர்கள், சிவனாரை வணங்கி மன்னிப்புக் கோரினார்கள். அதன் பின் இரண்டாக உடைந்த பரசு சிவனாரின் ஆயுதமாகியது.

பரசுராமரின் தந்தை ஜமதக்னி மகரிஷி. அவர் நர்மதை நதிக்கரையில் ஒரு மரத்தடியில் அமர்ந்தவாறு ஆழ்ந்த தியானத்திலும், தபசிலும் ஈடுபட்டிருந்தார். அச்சமயம் அங்கு வந்த மன்னர் அவருடன் பேசுவதற்கு பலவாறும் முயற்சித்தும் அவரின் நிஷ்டை கலையாமல் தபசிலேயே ஈடுபட்டுக் கொண்டிருந்தார்.

அந்நாட்டின் மன்னரான தன்னையே மதிக்காமல், பேசாமல் தவத்திலேயே ஆழ்ந்திருந்த ஜமதக்னி மகரிஷியின் மேல் கோபம் கொண்ட மன்னர் அவர் மேல் ஒரு செத்த பாம்பைப் போட்டும் மற்றும் பலவிதங்களிலும் கேவலப்படுத்தியும் அவமானப் படுத்தினார். பிறகு சற்று நேரத்தில் அங்கு வந்த (பரசு) ராமர், தன் தந்தைக்கு ஏற்பட்ட அவமானத்தைக் கண்டு கடும் கோபம் கொண்டு, அந்த மன்னர் வம்சத்தையே அடியோடு அழிக்க சபதம் மேற்கொண்டார்.

தனக்குப் போர் பயிற்சி இல்லாததால், அவர் இமயமலையில் சிவனாரை நோக்கி கடும் தவம் செய்து வில் வித்தையிலும், போர் முறைகளிலும் திறமை பெற வேண்டினார்.

அசுரர்கள் தேவர்களை அக்காலத்தில் துன்பப் படுத்தியதால், அவர்கள் சிவனாரிடம் முறையிட் டார்கள். சிவனார் (பரசு) ராமரை அசுரர்களுடன் போரிட்டு அவர்களை அழிக்கும்படி உத்தரவிட்டு அருள்பாலித்தார். அவரிடம் ஆயுதங்கள் ஏதும் இல்லாவிட்டாலும் எவ்வித தயக்கமும் இல்லாமல் (பரசு) ராமர் அவர்களுடன் போரிட்டு அழித்து வெற்றி



கண்டார். இதனால் மகிழ்ச்சி அடைந்த சிவனார் அவருக்குப் பலவிதமான வரங்களையும், தெய்வீக ஆயுதங்களையும், பரசுவையும் கொடுத்து ஆசீர்வதித்தார். அவர் விஷ்ணு அம்சம் என்பதால் மகா விஷ்ணு வில்லைக் கொடுத்தார்.

சிவபெருமானிடமிருந்து மழு என்கிற பரசுவை பெற்றுக் கொண்டதால் ராமர் பரசுராமரானார்.

சிவனாரின் பரசுவைக் கொண்டு லட்சக்கணக்கான அரச குலத்தினரை, தன்னந்தனியே, ஒருவராகவே அவர்கள் அனைவரையும் போரில் கொன்று குவித்து பழி தீர்த்துக் கொண்டார்.

கடைசியில் தன் ஆயுதங்களை சிவனாரிடமே ஒப்படைத்துவிட்டு, சந்நியாசியாக தமிழ்நாட்டிற்கு வந்து, அங்கிருந்து கேரள தேசத்தை உண்டாக்கி சிவ வழிபாட்டில் ஈடுபட்டு, இன்றும் சிரஞ்சீவியாக வாழ்கிறார்.

# 9. தோடு

தோடு, சிவபெருமானின் புனிதமான சின்னங்களில் ஒன்று. "தோடுடைய செவியன்" எனத் திருமுறை ஆரம்பத்திலேயே சிவனாரை வர்ணிக்கிறது.

காது ஓம்கார ஸ்வரூபமாக விளங்குகிறது. 'ஓம்' ஐந்து எழுத்துக்களின் ஒலிகளின் கூட்டே. 'அ', 'உ', 'ம' என்கிற மூன்றெழுத்துடன் 'ம்' என்கிற ஒலி பராசக்தி யையும், அவைகளின் உச்சரிப்பால் ஏற்படும் நாதம் சிவப்பரம் பொருளையும் குறிக்கும். இதற்கு பிரணவம் என்று பெயர். அதாவது என்றும் நிலையானது என்று பொருள். 'ஓம்காரம்' பஞ்சாட்சரமாகிய 'நமசிவாய'த் தையும் பிரபஞ்ச இயக்கத்தையும் குறிக்கிறது.

சிவபெருமான் இரண்டு காதுகளிலும் தோடுகளை அணிந்துள்ளார். சாதாரணமாக ஒரு தோட்டில் ஏழு இரத்தினக் கற்களான வைரம் அல்லது புஷ்பராகம் அல்லது மாணிக்கம் (ரூபி) இருக்கும். இரண்டு காதுகளிலும் சேர்த்து பதினான்கு ரத்தினக் கற்கள் இருக்கும்.

சிவனாரை உருவகப்படுத்தி வர்ணிக்கும்போது அவரது வலது கண் சூரியனென்றும், இடது கண் சந்திரனென்றும் சொல்லப்படுகிறது. சிவனாரின்



காதுகளில் உள்ள தோடுகளிலிருந்து ஒளிக்கதிர் வீச்சுகள் இரு கண்களான சூரிய, சந்திரர்களுக்கு ஒளியையும், ஆற்றலையும் அளிக்கின்றன. அதனால் தான் நம் முன்னோர்கள் காதுகளில் கடுக்கண் களையும், தோடுகளையும் அணிவித்து விழிநலன் பாதுகாத்தனர். மேலைநாட்டு ஆடவரும், பெண்டிரும் கூட கடுக்கண்களையும், தோடுகளையும் அணிகிறார்கள். இதன் மூலம் உலகம் சிவமயம் என நிரூபணமாகிறது.

பிரபஞ்ச சிருஷ்டிக்காக சிவப்பரம்பொருள் ஈரேழு வியாகிருதிகளைக் கூறி ஈரேழு உலகங்களை யும், தாதுக்களையும், ஜீவராசிகளையும், மொழி களையும் படைத்தார். இதை "மகேஸ்வர சூத்ரானி என்று கூறுகிறார்கள். அவற்றுள் சூர்ய சந்திரரும் அடங்குவர்.

சூரியன் ஆத்மகாரகனாக இருந்து, ஜீவன்கள் பிறக்கவும் வளமுடன் வாழவும் ஏதுவாகிறது அதேபோல் சந்திரன் தன்னொளியால் ஜீவன்களுக்கு சுகத்தையும், ஔஷதங்களையும் அளித்து காப்பாற்று கிறது. இதற்கான ஆற்றலை அவைகள் சிவனாரின் தோடுகளி லிருந்தே பெறுகின்றன. தோடுகளை அணிகலன்களாக கொண்ட சிவனாரின் காதுகள் புனிதமானவை. அவற்றில் உள்ள தோடுகள் சிவச்சின்னங்களாக பெருமை அடைகின்றன. காஞ்சி காமாட்சியும், திருவானைக்கா அகிலாண்டேஸ்வரியும் தடாங்கம் என்ற தோடுகளை அணிகிறார்கள்.

ஒரு சமயம் காசியிலும், மற்றொரு சமயம் திருக்கடையூரிலும் நிகழ்ந்த பராசக்தியின் லீலைகள் தோட்டின் பெருமையை விளக்குகின்றன. மிகச் சிறந்த சக்தி உபாசகர்கள், கவனக் குறைவால், தங்கள் மன்னனிடம் அமாவாசை தினத்தை பௌர்ணமி தினம் எனக் கூறிவிட்டார்கள். சீற்றமடைந்த மன்னர் அன்றைய தினம் பௌர்ணமி என்று நிருபிக்கா விட்டால், தீயில் இடப்பட்டு மரணமடைவீர்," என தண்டனைக்ளை விதித்து விட்டார்.

மரண தண்டனைக்கு சிறிதும் அஞ்சாத சக்தி உபாசகர்கள், பராசக்தியை பக்தியுடன் போற்றித் துதித்தார்கள். பொழுதும் சாய்ந்தது; மன்னரும் வீரர்களும் மரண தண்டனையை நிறைவேற்ற தீயை உண்டாக்கி வளர்த்தார்கள். இதைக் கண்டு பதற்றப்படாமல், சக்தி உபாசகர்கள் அம்பாளை துதித்துக் கொண்டேயிருந்தார்கள். உடனே அன்னை பராசக்தி தன் இடது காது தோட்டை வானில் வீசினாள். இடது காது சந்திரனாகியதால் அதிலிருந்த தோடு, விண்ணில் பூரண நிலாவெனத் தோன்றியது. குளிர்ச்சியான சந்திர ஒளியும் உலகெங்கும் பரவியது.

மீனாட்சி – சுந்தரேஸ்வரர் திருமணத்திற்கு, அம்மையின் சகோதரர், சிவபக்தரான மகாவிஷ்ணு, தாய் வீட்டு சீதனமான திருமாங்கல்யம் மற்றும் பலவித ஆபரணங்களையும், சீர்வரிசைகளையும் முகூர்த்த நேரத்திற்குள் கொண்டு வரும் வழியில் தாமத



மாயிற்று. வைகையில் வெள்ளம் பெருக்கோடியதால் நதியைக் கடக்க முடியவில்லை.

குறிப்பிட்ட முகூர்த்தத்திற்குள் தாலி கட்ட வேண்டியதனால் மாப்பிள்ளை சுந்தரேஸ்வரர் திருமண மண்டபத்திலிருந்த பனை ஓலை ஒன்றைக் கிழித்து, அதில், "சிவ சிவ" என்று தன் பெயரை எழுதி அம்பிகையின் கழுத்தில் கட்டி விட்டார். அதேபோல், பனை ஓலையாலேயே தோடு மாதிரி புனைந்து காதுகளில் அணிவித்து விட்டார். பனை ஓலைக்கு வடமொழியில் தாலி என்று பெயர். திருமாங்கல் யத்திற்கும் தாலி என்கிற பெயரே புனிதமாக நிலைத்து விட்டது. இன்னும் தென்தமிழ்நாட்டுப் பெண்களின் திருமாங்கல்யத்தில் சிவலிங்கமும், சந்திர சூரியர்களும் புடைப்பாக அமைந்திருப்பது இதனால்தான்.

பனை ஓலைத் தோட்டைப் போல், தங்கத்தில் செய்து தோடாக அணிகிறார்கள். இதற்கு பாம்படம் என்று பெயர்.

தாலியும், தோடாகிய பாம்படமும், மிகவும் புனிதமானவை. இதைத் தொட்டு எந்த பெண்ணும் பொய் சத்தியம் செய்ய மாட்டாள்.

தோடும், சிவச்சின்னங்களில் முக்கியமான ஒன்று.

# 10. மான், புலித் தோல்

மிகவும் புராதன காலத்தில், தாருகா வனத்தில் ஏராளமான ரிஷிகள் பர்ணசாலை அமைத்துக் கொண்டு சீரிய முறையில் தவம் செய்து கொண்டும் யாக, யக்ஞாதிகள் செய்து கொண்டும் மனைவிகளுடன் சிவபெருமானை வழிபட்டு வந்தார்கள்.

அந்த தவசீலர்கள் வெளியுலகைக் கண்டறியாத வர்கள். கள்ளங்கபடில்லாதவர்கள். அதிகளவில் தவங்களை செய்ததாலும், யாகங்கள் செய்ததாலும் அதனால் கிடைத்த பலன்களினால் மேன்மையுற்று கர்வத்துடன் வாழ்ந்தார்கள். அகம்பாவம் உள்ளவர்களாக இருந்தார்கள்.

அவர்களின் தவங்களையும், வழிபாட்டுகளையும் கண்டு மனமுவந்த சிவனார் அவர்களின் அகம்பாவத்தை அழிக்கவும், அதன் பின் அவர்களுக்கு அருள்பாலிக்கவும் திருவுள்ளம் கொண்டார்.

தன்னை கங்காள மூர்த்தியாக, மண்டை ஓடு அணிந்தவராக, திருமேனி முழுவதும் திருநீறு பூசியவராக, கையில் கபாலக் கோப்பையை ஏந்தியவராக, பாம்புகளை அணிந்தவராக கோரைப் பற்கள் உள்ளவராக, பயங்கர உருவத்துடன் அவர்களின் இருப்பிடத்திற்கு வந்தார்.



ரிஷி கணங்களுக்கு இவ்விதமான அருவறுப்பாகத் தோன்றினாலும், மறுபக்கம் ரிஷிபத்தினிகளுக்கு சிவனார், ஆணழகனாகவும், வசீகரமாகவும், பார்த்தவுடன் பெண்கள் காம இச்சை கொண்டு அவர் மேல் மையல் கொள்ளுமாறும் காட்சியளித்தார். இந்த அழகான சுந்தர புருஷனைக் கண்ட ரிஷி பத்தினிகள், மதிமயங்கி, அவரைக் காமக் கண்களோடு பார்த்து சூழ்ந்து கொண்டார்கள். தன்னிலையை மறந்தார்கள்.

இந்நிலையைக் கண்ட ரிஷிகள், தங்கள் மனைவிகளை சிவனார் கவர்ந்து சென்று விடுவாரோ? என அச்சமுற்று சினம் கொண்டார்கள். வந்திருப்பது சிவனார் என்று உணராத ரிஷிகள் அவரை உடனே அவ்விடத்தில் இருந்து துரத்த அரும்பாடுபட்டார்கள். அவரைத் துரத்த முடியாததால், அறியாமையால், ஆபீசார (ஏவல்) பிரயோகத்தால், யாகக் குண்டத்தி லிருந்து ஒரு பூதத்தை வரவழைத்து ஏவினார்கள். அப்பூதம் மான் உருக்கொண்டு சிவனாரைத் தாக்க ஆக்ரோஷமாக சீறிப் பாய்ந்து வந்தது. சிவனார் அம்மானின் ஆக்ரோஷத்தை அடக்கி, அதைத் தன் கையில் வைத்துக் கொண்டார்.

ஏமாற்றம் அடைந்த ரிஷிகள் மறுபடியும் ஆபீசார மந்திரப் பிரயோகத்தால் யாகக் குண்டத்திலிருந்து ஒரு பயங்கரமான புலியை சிருஷ்டித்து சிவனார் மேல் ஏவினார்கள்.

புலி பயங்கரமான குரூர ஸ்வபாவம் உள்ள மிருகம். தன் இரையை இரக்கமில்லாமல் கொன்று தின்றுவிடும். அதேபோல், ஆசை என்கிற காம இச்சைகள் போன்றவை தீராத மோகம் கொண்ட மனிதனை அழிப்பது போல் புலியின் குணமும் இருக்கும்.

சிவபெருமான் அதைப் பிடித்துக் கொன்று, அதன் தோலை தன் இடுப்பில் கட்டிக் கொண்டார். இதன் மூலம் சிவனார் ஆசைகளை வென்றவர் எனப் புலனாகிறது.

மீண்டும் ஒரு பாம்பையும், முயலகன் என்ற கொடிய அரக்கனையும், ஏவினார்கள். சிவபெருமான் பாம்பைப் பிடித்து தன் இடுப்பில் கட்டிக் கொணடார்.

முயலகன் என்கிற அரக்கன் அறியாமையையும் அகம்பாவத்தையும் குறிக்கும் தீயசக்தி. சிவனார் அவனைக் கீழேத் தள்ளி தன் காலால் மிதித்து அடக்கினார். அறியாமையையும், அகம்பாவத்தையும் அடக்கினார்.

யாகக் குண்டத்திலிருந்து சிவக்க சிவக்க காய்ச்சிய, அக்னியால் ஒளிரும் ஒரு இரும்புத் தடியை அவர் மீது வீசினார்கள். சிவனார் அதைப் பிடித்து, உடைத்து ஆயுதமாக வைத்துக் கொண்டார். அதன் பாகங்களில் இருந்து தான் மழு என்கிற ஆயுதத்தை சிருஷ்டித்தார். செய்தவறியாத ரிஷிகளும், ரிஷி பத்தினிகளும் அவர் காலில் விழுந்து சரணடைந்து காப்பாற்றுமாறு கெஞ்சிக் கதறி அழுதார்கள். அவர்களின் அகம்பாவமும் விலகியது.

சிவபெருமான் அவர்களுக்கு பொன்னார் மேனியனாகத் தோன்றி, அருள்பாலித்து, நற்கதி அளித்தார். அதனால் சிவபெருமானை, "பொன்னார் மேனியனே" என்றும், "மானாட, மழுவாட, மதியாட, புனலாட, தண்டையாட, புலியுடையாட" என்றும் போற்றி வணங்குகிறோம்.



# 11. கட்வாங்கம், பிநாகம், கண்ணாடி

**கட்வாங்கம்:**

கட்வாங்கம் என்பது கட்டில் கால் எனப் பொருள்படும். மரத்தச்சர் கட்டில் கால் செய்வதற்கு மரத்தைக் கடைந்து அதில் சதுரமாகவும், உருளையாகவும் உருவம் கொடுப்பார்.



சிவபெருமான் கையில் ஏந்தியிருக்கும் ஒரு விதமான ஆயுதம் இதை ஒத்திருப்பதால், சிலை வடிக்கும் சிற்பிகள் இதற்கு கட்வாங்கம் என்று பெயரிட்டுள் ளனர்.

மனித எலும்பினால் செய்யப் பட்டுள்ள இதன் மேல் உச்சியில் மனித மண்டையோடு சொருகப் பட்டிருக்கும். இது, யாவராலும் எதிர்க்க முடியாததாகவும், மந்திரத் தடியாகவும் உபயோகிக்கப்படும் ஆயுதம்.

இது சிவனார் மாந்திரீகத்திற்கு தலைவர் என்றும், மண்டை ஓட்டில் ரத்தம் குடிப்பது அவர் அனைத்தையும் அழிக்கும் சக்தி படைத்தவர் என்பதையும் காட்டுகிறது.

அச்சமூட்டும் வகையில் உருவகப்பட்டுள்ள கங்காள மூர்த்தி என்கிற சிவஸ்ரூபம் இதை ஒரு கையில் வைத்திருப்பதாக சித்தரிக்கப்படுகிறது.

மிகவும் பெரும் பாவங்களைச் செய்தவர்கள், இதைக் கையில் ஏந்திக் கொண்டு, நிர்வாணமாக 12 ஆண்டுகள் பிச்சையெடுத்தும், மனித மண்டை ஓட்டினால் ஆன கோப்பையில் உணவு உண்ணும் படியும் நேரிடும்.

முண்டனமாலை என அறியப்படும் மண்டை ஓட்டு மாலை அணிந்தும், சாம்பலை உடல் முழுவதும் பூசிக் கொண்டும் இருப்பதால் சிவனார் அனைத்தையும் அழிக்கும் ஆற்றல் படைத்தவராகிறார்.

இதே மண்டையோடுமாலை காலங்களின் சுழற்சியையும், அடுத்தடுத்து வரும் மனித குலத்தின் பிறப்பையும், இறப்பையும் குறிக்கிறது.

## பிநாகம்:

ஒரு சமயம், தற்செயலாக, சிவனாரின் கையிலிருந்து நழுவி விழுந்த திரிசூலம் வில்லாக மாறியது.

பிநாகம் என்பது ஒரு பயங்கரமான பாம்பு. வான வில்லின் ஏழு நிறங்களைக் கொண்டது. இதுவே சிவனாரின் வில்லில் நாணாக உபயோகிக்கப்படுகிறது. இது ஏழு தலைகளையும், பயங்கரமான பற்களையும்





உடையது. இதன் வாயிலிருந்து மிகவும் கொடிய விஷம் எப்போதும் வெளியேறிக் கொண்டேயிருக்கும். இந்த நாணின் ஒருமுனை சிவனாரின் கழுத்தில் சுற்றப்பட்டிருக்கும்.

இந்த வில்லின் மூலம் தான் சிவனார் பாசுபதாஸ்த்திரத்தை ஏவுவார். அந்த பாசுபதாஸ்திரம் சூரினைய் போல் பிரகாசிக்கும், மரணத்தை நிச்சயம் தரும் அக்னியைக் கக்கும் அஸ்திரமாகும். இது எதைத் தொட்டாலும் அது எரிந்து சாம்பலாகிவிடும். நாராயணாஸ்திரம், பிரம்மாஸ்திரம், ஆக்னேயாஸ்திரம், வருணாஸ்திரம் என அனைத்தும் இதனால் அழிக்கப்படும்.

இந்த பிநாக வில்லில், பாசுபதாஸ்திரத்தைப் பூட்டி திரிபுராந்தகர்களை சிவனார் அழித்தார்.

பிநாகம் என்கிற வில்லை சிவனார் ஏந்தியிருப்பதால் அவருக்கு பிநாக பாணி என்றும் பெயருண்டு.

## தர்பணா (கண்ணாடி):

சிவனார் கையில் வைத்திருக்கும் 'தர்பணா' என்கிற கண்ணாடி, அனைத்து சிருஷ்டிகளையும் அவரின் பிரபஞ்ச வடிவத்தையும் பிரதிபலிப்பதாகக் காட்டுகிறது.

# 12. பாசக்கயிறு, அங்குசம், பாம்பு



பாசக்கயிறு மக்கள், ஜீவன்கள், உணர்வுகளாலும், பந்தங்களாலும் கட்டப்படு வதைக் குறிக்கிறது. இந்த நீண்ட கயிற்றின் முனையில் சுருக்கு வதற்கான வளையம் அமையும் படி வடிவம் கொண்டிருக்கும். இதை சிவனார் யமதர்ம ராஜாவிற்கு அளித்தார். அவர் ஆயுட்காலம் முடிந்த ஜீவன்களின் மேல் இதை வீசி அவர்களை பந்தங்களில் இருந்து விடுவித்து இழுத்துச் செல்கிறார்.

பராசக்தி, வருணர், கணேசர் என்கிற தெய்வங்களும் பாசக்கயிறு ஏந்தியவர்கள்.

**அங்குசம்:**

அதேபோல், அங்குசம் என்கிற மிரட்டி அடக்கும் ஆயுதத்தையும் கொண்டிருப்பார்கள். அங்குசம் எப்பேர்ப்பட்ட வலிமையான முரட்டு ஜீவன்களையும் அடக்கிவிடும். ஒரு அசுரன் யானை உருவம் எடுத்து





சிவனாரை தாக்க வந்தபோது அவர் அவனைக் கொன்று அந்த யானையின் தோலை தன் மேல் போர்த்திக் கொண்டார். சிவனார் அனைத்து மிருகத்தன்மைகளையும் அடக்கியவர் என்று ஈண்டு நிருபணமாகிறது. அதனால்தான் யானையை அடக்கி வைப்பதற்கு அங்குசத்தை பயன் படுத்துகிறோம்.

தேவர், தேவியரின் வலது கையில் அங்குசமும், இடது கையில் பாசக்கயிறும் இருப்பதாக சித்தரிக்கப் படுகிறார்கள்.

**பாம்பு:**

காஸ்யப மகரிஷிக்கும், அவர் மனைவி கத்ருவுக்கும் பாம்புகள் பிறந்தன. காஸ்யப மகரிஷி பிரஜாபதிகளில் ஒருவர்.

கத்ரு, குணவாதியாக இல்லாததால், அவளுக்கு தீய குணங்களைக் கொண்ட பாம்புகள் பிறந்தன. நன்றி கெட்டவர்களாகவும், காம இச்சையைத் தூண்டுபவர் களாகவும் ஆண்டவரின் ஆணைக்கு கீழ்படியாதவர் களாக செயல்படுபவர்களாகவும் இருந்தார்கள்.

முண்டகோபநிஷத்தில் ஒரு தத்துவம் விளக்கப் பட்டிருக்கிறது. ஜீவாத்மா, பரமாத்மா, இரண்டையும் சரீரம் என்கிற ஒரே பிப்பல மரத்தில் இருக்கிற இரண்டு பறவைகளாகவும் அதில் ஜீவாத்மா பறவை

மட்டும் பழத்தை (கர்ம பலத்தை) சாப்பிடு வதாகவும், பரமாத்மா பறவை சாட்சி மாத்திரமாக பார்த்துக் கொண்டே இருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது.

பிற்காலத்தில் உண்டான கிறிஸ்தவர்களின் புனித நூலான பைபிளிலும், ஜெனிசிஸ் என்கிற பகுதியில் இதே மாதிரி தத்துவ விளக்கம் உள்ளது. ஆதாம் (ஆத்மா, பரமாத்மா) ஆப்பிள் பழத்தை சாப்பிடாமல் இருந்ததாகவும், ஈவா (ஜீவன், ஜீவாத்மா) அதைச் சாப்பிட்டதாகவும் கூறப்பட்டுள்ளது. (இயேசுநாதர் இந்தியாவில் 10 ஆண்டுகள் தங்கியிருந்ததாக ஒரு கருத்து நிலவி வருகிறது) ஈவா ஆண்டவரால் தடை செய்யப்பட்ட ஆப்பிள் பழத்தைச் சாப்பிடத் தயங்கிய போது, அம்மரத்தின் மேலிருந்த பாம்பு அப்பழத்தை சாப்பிடத் தூண்டியவாறு துர்போதனை செய்து, ஆப்பிள் பழத்தைச் சாப்பிடச் செய்தது. உடனே அவளுக்கு காம, பாலியல் இச்சை உண்டாகி, வெட்கம் ஏற்படவே தன் அந்தரங்கங்களை இலையால் மூடிக் கொண்டாள். ஆதமும் அதைச் சாப்பிடவே அவர்கள் இருவரும் இணைந்து புத்திரரர்களை ஈன்றெடுத்தார்கள்.

நமக்கு மரணத்தை அளிக்கும் விஷப் பாம்புகள் சிவனாரிடம் அடங்கி அவரின் ஆபரணமாகின. அவரால் மட்டுமே பாம்புகளின் ஆலால விஷத்தைக் குடித்து உலகத்தைக் காப்பாற்ற முடியும். இது அவர் மரணத்தை வெல்லும் மிருத்யுஞ்சயர் என்று விளக்குகிறது.

சுற்றிக் கொண்டிருக்கும் பாம்பு காலங்களின் சுழற்சியையும், ஜீவன்களின் மிகவும் நுண்ணிய



தோற்றத்தையும் (Microcosm) சக்தியையும், அதனால் கர்ப்பம் ஏற்படுவதையும் குறிக்கிறது.

ஆணினத்தின் கருவுயிர் நீர்மத்தில் உள்ள ஆண்கரு பாம்பு போல் நெளிந்து தான் பெண்ணினத்தின் கர்பத்தை அடைகிறது. யோக சாஸ்திரங்களில் குண்டலினி சக்தியை பாம்புடன் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

சிந்துவெளி அகழ்வாராய்ச்சியில் நாக தம்பதிகளின் உருவம் கிடைத்துள்ளன. அவர்கள் நாகர்களை வழிபட்டது புலனாகிறது. அதேபோல் பண்டைக் காலத்தில் கிரேக்கம், எகிப்து மற்றும் அசீரியா நாடுகளிடம் பாம்பு வழிபாடு இருந்ததாகக் கருதப்படுகிறது. சர்ப்ப வழிபாடு சுபிட்சத்தையும், புத்திர பாக்யத்தையும், நீண்ட ஆயுளையும் தருவதாகக் கருதி, குறிப்பாக பெண்கள் வழிபடுகிறார்கள்.

வில் சண்டையின்போது, அம்பை வில்லில் பூட்டி நாக மந்திரத்தை ஓதி எய்வதற்கு நாகாஸ்திரப் பிரயோகம் என்று பெயர். அது எதிரியைக் கட்டிப் போட்டுவிடும். இராவணேஸ்வரரும், அவர் மகன் இந்திரஜித்தும் இவ்வகை அஸ்திரத்தைக் கொண்டவர்கள். இராம, லட்சுமணரை இந்திரஜித் நாகாஸ்திரத்தால் அடித்து கட்டிப் போட்டு மயக்கம் அடையச் செய்தார். இதனால் அடிக்கப்பட்டவர் தப்பிக்கவே முடியாது. இதற்கு மாற்று கருடாஸ்திரம் மட்டுமே.

பராசக்தியும், காளியும், விக்னேஸ்வரரும் இதை கையிலும், சரீரத்திலும் அணிகலன்களாகக் கொண்டவர்கள்.

# 13. பாசுபதாஸ்திரம்

சிவபெருமானின் மிகவும் சக்தி வாய்ந்ததாகவும், எவராலும் தடுக்க முடியாததாகவும், நிச்சயம் அழிக்கும் சக்தி வாய்ந்ததாகவும் விளங்கும் ஆயுதம் பாசுபதாஸ்திரம்.

இது ஒரு அம்பு. இதன் முனை பிறைச் சந்திர வடிவில் ஏவப்பட்டவரின் கழுத்தை அறுத்துத் துண்டித்துத் தள்ளும்படியாக இருக்கும். இது சூரியப் பிரகாசத்தைப் போல் ஒளிர்வதாகவும், மரணத்தைக் கொடுக்கும் அக்னி தீப்பிழம்பாகவும் இருக்கும்.

பிரும்மா, விஷ்ணுவையும் கூட கொல்லும் சக்தி வாய்ந்தது என்று மகாபாரதம் அனுசாஸன பர்வத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

பசு என்பது சிருஷ்டிக்கப்பட்ட அனைத்து ஜீவராசிகளையும் குறிக்கும். பதி என்பது சிருஷ்டிக் கப்பட்ட அனைத்துக்கும் தலைவர், உரிமையாளர், அதாவது சிவபெருமான் என்று பொருள். பசுபதியின் அஸ்திரமானதால் பாசுபதாஸ்திரம் எனப் பெயர் பெற்றது.

இந்த அஸ்திரம் வில், மனம், வாக்கு, கண்கள் மூலமாகவும் பிரயோகிக்கப்படும். இது சிருஷ்டிக்கப் பட்ட அனைத்தையும் மற்றும் ஜீவராசிகளையும் முழுவதுமாக அழிக்கும் ஆற்றல் கொண்டது.





இதை தனக்கு நிகரில்ல தாவர் மேலும், தர்ம நியாயங் களை பின்பற்றுபவர் மீதும் பிரயோகித்தால் வேலை செய்யாது, திரும்பி வந்துவிடும். அறம் காக்கவும், நீதி பரிபாலனத்துக்கு மட்டுமே இதை உபயோகிக்க வேண்டும்.

கடும் தவத்தின் மூலம் அர்ஜுனர் இதை சிவனாரிட மிருந்து பெற்றார்.

மகாபாரதப் போரில் நெறி தவறிய ஜயத்ரத மன்னன் மீது இது செலுத்தப்பட்டது.

இராம – இராவண யுத்தத்தில், இந்திரஜித் லட்சுமணர் மீது ஏவிய இவ்வாயுதம், அவரைத் தாக்காமல் திரும்பி வந்து விட்டது.

கூர்ம புராணத்தில், நரசிம்மருக்கும் அசுரர்களுக்கும் இடையே நடந்த போரில் இவ்வாயுதம் நரசிம்மரைத் தாக்காமல் திரும்பி விட்டது.

அர்ஜுனரைப் போல் பீஷ்ம பிதாமகரிடமும் இவ்வாயுதம் இருந்தது. பரசுராமரிடம் இல்லை.

பீஷ்ம – பரசுராம யுத்தத்தின் நடுவில் பரசுராமர், முதுமையினால், மயங்கி கீழே விழுந்து, தூங்கியும் விட்டார். அச்சமயம், பீஷ்மர் பரசுராமரைக் கொல்ல, பாசுபதாஸ்திரத்தைக் கையிலெடுத்தார். உடனே தேவர்கள், அசரீரியாக, "குருவுக்கு எதிராக இதைப்

பிரயோகித்தால், அது அவருக்கு இழைக்கப்பட்ட அவமானமாகும் என எச்சரித்தார்கள். யுத்த களத்தில் தூங்குபவர் இறந்து விட்டதாகக் கருதப்படுவார் என வேதங்கள் கூறுகின்றன. ஆகவே, பீஷ்மர் யுத்த களத்திலிருந்து அடக்கத்துடனும், கண்ணியமாகவும் விலகிவிட்டார். தன் குருவுடன் யுத்தம் செய்ய விருப்பமில்லை என்றும், அவரே அழைத்ததால் தான் யுத்தம் செய்ய வந்ததாகவும் தெரிவித்தார்.

திரிபுராசுரர்களை சம்ஹரிக்கும் காலத்தில், சிவனார் பாசுபதாஸ்திரத்தை வில்லில் பூட்டி ஏவினார். அது மகா பிரளய காலத்தில், பயங்கரமான தீக்கதிர்களைக் கக்கிக் கொண்டு பார்ப்பவர் கண்கள் கூசும் விதமாகத் தோன்றியது. பூமியிலிருந்து ஆரம்பித்து, திரிபுராசுரர்களையும், அவர்களின் மூன்று விதமான உலோகக் கோட்டைகளையும் எரித்து சாம்பலாக்கியது. திரிபுராசுரர்களின் சரீரங்களைத் துளைத்துக் கொன்றது.

நேப்பாள நாட்டின் தலைநகரான காத்மாண்டுவில் பிரமாண்டமான பசுபதிநாதர் கோவில் உள்ளது. இங்கு சிவனாரின் ஆயுதமாக, அவர் கையில் பாசுபதாஸ்திரம் விளங்குகிறது.

சிவ பக்தர்கள் இவ்வாயுதத்தை சிவனாகவே பாவித்து வணங்குகிறார்கள்.

பாசுபத மந்திரத்தை ஒரு தரம் ஜபித்தால் அனைத்து தடைகளும் நீங்கும். நூறு முறை ஜபித்தால் எதிர்வரும் அனைத்து பேரழிவுகளையும், மகாயுத்தத்தில் நிச்சயமாக வெற்றியைத் தரும்.



# 14. கங்கை

புராதன காலத்தில் ஒரு சமயம் கங்கை, சரஸ்வதி, லட்சுமி ஆகிய மூவருக்கும் மஹா விஷ்ணுவிடம் யார் அதிகம் ஈடுபாடு கொண்டவர்கள்? என்கிற விஷயத்தில் சச்சரவு ஏற்பட்டது.

கங்கை மிகவும் வசீகரமான தோற்றமும், மற்ற தேவ கன்னியர்களை விட பேரழகு உள்ளவளாகவும் இருந்தாள்.

இவர்களின் சச்சரவு நீடித்துக் கொண்டே போனதால், மஹாவிஷ்ணு தலையிட்டு, "உங்கள் ஆணவமும் பொறாமையும் தவறானது; தண்டிக்கப்பட வேண்டியது. ஆகவே, நீங்கள் மூவரும் நதிகளாக மாறி பூவுலகில் பாய்ந்து நீராடும் மக்களின் பாபங்களை ஏற்றுக் கொண்டு, அவர்களைப் புனிதமாக்குங்கள். நீண்ட காலத்திற்குப் பின் கங்கை சிவபெருமானையும், சரஸ்வதி பிரும்மாவையும், லட்சுமி என்னையும் அடைந்து மனைவியாவீர்கள்."

மஹாவிஷ்ணுவின் ஆணைப்படி சரஸ்வதியும், லட்சுமியும், உடனே நதிகளாக மாறி பூலோகத்தில் சரஸ்வதியாகவும், வேதவதி நதியாகவும் ஓட ஆரம்பித்து விட்டார்கள். ஆனால், நதியாக மாறிய கங்கை பிரபஞ்சத்திற்கு மேலேயே ஓடிக் கொண்டிருந்தாள். பிரும்ம லோகமான சத்யலோகத்திலேயே ஓடிக் கொண்டிருந்ததால் பிரும்ம கங்கை எனப் பெயர் பெற்றாள்.

தென்னாட்டில் மஹாபலி சக்ரவர்த்தி என்கிற மாமன்னர் வலிமை மிக்கவராய், நீதி தவறாதவராய், தர்ம சாஸ்திரங்களைக் காப்பாற்றுபவராக பெரும் புகழுடன் ஆட்சி செய்து வந்தார். அக்காலக் கட்டத்தில் தேவேந்திரன் முதலிய தேவர்கள் வடநாட்டில் சீரும் சிறப்புமாக ஆட்சி செய்து வந்தார்கள். ஆர்யவர்த்தம். நாகரீகத்திலும், வளர்ச்சியிலும் கலாச்சாரத்திலும் முன்னேறியதாகவும், தென்னாடு வளர்ச்சி அடையாத, கலாச்சாரத்தில் பின்தங்கியதுமாக, தண்டகாரண்ய காட்டுப்பிரதேசமாக இருந்தது. வடநாட்டவர்கள் மஹாவிஷ்ணுவை ஆராதிப்பவர்களாகவும், தென்னாட்டவர் சிவனை ஆராதிப்பவர்களாகவும் இருந்தார்கள்.

தென்னாடாகிய தண்டகாரண்யத்திற்கு, ஜனஸ்தானத்திற்கு, வடக்கு எல்லையில் பரசுராமர் என்கிற பிரும்மரிஷியும், மஹாபலி சக்ரவர்த்தியும் நர்மதா நதிக்கரையிலும், மேற்கில் வாலியும், தெற்கில் இராவணரும் காவலராக இருந்து கொண்டு, வடநாட்டவர்களின் ஆதிக்கச் சூழ்ச்சிகளை முறியடித்துக் கொண்டிருந்தார்கள்.

இந்நிலையில், தேவேந்திரனுக்கு உதவி செய்யும் வகையில், மஹாவிஷ்ணு, வாமனாவதாரம் எடுத்து நர்மதை நதிக் கரையில் யாகம் செய்து கொண்டிருந்த மகாபலியிடம் மூன்றடி மண் தானமாக கேட்டார். வெறும் மூன்றடி மண் மட்டுமே கேட்கிறாரே என்று திகைத்து நின்ற மகாபலியிடம், அவரின் குரு சுக்ராச்சாரியார், ‘வந்திருப்பது ஸ்ரீ மஹாவிஷ்ணுவே என்றும், வஞ்சக சூழ்ச்சிக்கு பலியாக வேண்டா



மென்றும், அறிவுறுத்தினார். ஆனாலும், தர்மப் பிரபுபான மஹாபலி, தன் முன் யாசகராக வந்திருப்பது ஸ்ரீமந் நாராயணனே என்பதால், பக்தி மேலீட்டால், கண்கள் ஆனந்தக் கண்ணீரை அருவியெனக் கொட்ட, பகவானைப் பலவாறாக துதித்து, “மூன்றடி மண் என்ன? என் நாட்டையை எடுத்துக் கொள்ளுங்கள். என்னிடம் உள்ள அனைத்தையும் எடுத்துக் கொள்ளுங்கள் எனக் கெஞ்சி பிரார்த்திக்க, விஷ்ணுவோ மூன்றடி மண் மட்டுமே வேண்டும் எனப் பிடிவாதம் செய்தார். அவ்வாறே “தந்தேன்” என மஹாபலி தாரை வார்த்து தானம் அளித்தார்.

அக்கணமே ஸ்ரீமந் நாராயணன் விஸ்வரூபம் எடுத்து திரிவிக்ரமராக மாறி, பூலோகத்தை ஒரு காலாலும், விண்ணுலகை ஒரு காலாலும் அளந்து மூன்றாம் அடி வைக்க இடம் எங்கே என அதட்ட மஹாபலிச் சக்ரவர்த்தி தன் சிரசையே காட்ட, உடன் மஹா விஷ்ணு அவர் தலையில் தன் காலை வைத்து பூமிக்கடியில் அழுத்தி, கேரளா அருகில் உள்ள சுவேத த்வீபம் என்ற தீவில் சிறையில் வைத்து கை, கால்களை சங்கிலியால் பிணைத்து, அசைய முடியாதபடி சுவற்றில் கட்டி பலத்த காவலும் போட்டார்.

மஹாபலியின் நாட்டை தன் சேவகனான தேவேந்திரனுக்கு அளித்தார். (வால்மீகி இராமாயணம், உத்திரகாண்டம்)

விண்ணுலகை அளக்க நீட்டிய ஸ்ரீ மகாவிஷ்ணு வின் கால் நகம் பிரபஞ்சத்தின் மேல் பகுதியை கீறி விட்டது.

பிரபஞ்சத்திற்கு மேல் ஓடிக் கொண்டிருந்த கங்கை அந்த விரிசல் மூலம் கீழே பாய்ந்து ஓட ஆரம்பித்தாள். ஆனாலும், பூமிக்கு வராமல் ஆகாயத்திலேயே ஓடிக் கொண்டிருந்தாள். ஆகவே அவளுக்கு ஆகாயக் கங்கையென்றும், நூபுர கங்கை என்றும் பெயர் வரலாயிற்று. அவள் பிரபஞ்சத்தில் துருவ மண்டலத்தில் உள்ள மக்கள் மற்றும் ரிஷிகளின் பாவத்தைப் போக்கினாள்.

சகர மன்னர் அஸ்வமேத யாகம் செய்தார். அவரின் யாகக் குதிரையை தேவேந்திரன் அபகரித்து, பாதாள லோகத்தில் கபில மகரிஷி தவம் செய்து கொண்டிருந்த குடிலுக்கு அருகில் கட்டி வைத்து விட்டு ஓடிவிட்டார்.

சகர மன்னரின் 60,000 புத்திரர்கள் கொடியவர்களாக, தேவர்களையும், மக்களையும் துன்புறுத்தி வந்தார்கள். தேவர்கள் பிரும்மாவிடம் முறையிட, அவர் கபில மகரிஷியின் சாபத்தால் அவர்கள் அழிக்கப் படுவார்கள் என வரம் அளித்தார். இந்த சகர புத்திரர்கள் யாகக் குதிரையை தேடித் தேடி அலைந்து கடைசியில் ஒரு மாதிரியாக அந்த யாகக் குதிரை பாதாள லோகத்தில் கபிலர் ஆஸ்ரமத்தில் இருப்பதைக் கண்டுபிடித்து, அவரை சண்டைக்கு இழுத்தார்கள். ஆத்திரமடைந்த கபிலர் தன் கண் பார்வையால் அவர்களைக் கொளுத்தி சாம்பலாக்கினார்.

சகரபுத்திரர்கள் பூமியில் தோண்டியதால் ஏற்பட்ட பள்ளங்களில் நீர் நிரம்பியது. பின்னர் நதிகளெல்லாம் அந்தப் பள்ளத்தில் பாய்ந்ததால் அது கடலாக, சாகர சமுத்திரமாக மாறியது. கடலுக்கு சாகரம் எனப் பெயரும் உண்டாயிற்று. தேடும் முயற்சியில் காடுகளை அழித்ததால் உண்டான வறண்ட நிலம் பாலைவனமாகி சகாரா பாலைவனமென்றாயிற்று.



சகர மன்னரின் மற்றொரு மகனான அம்சுமான் பாதாள லோகத்திற்குச் சென்று கபில மஹரிஷியை வணங்கி, அவரின் கோபத்தைத் தணித்து சாந்தமாக்கினார். அம்சுமான் யாகக்குதிரையை ஓட்டிச் செல்லவும், பிற்காலத்தில் அம்சுமானின் பேரன் பகீரதன் கங்கையை ஆகாசத்திலிருந்து அழைத்து வந்து, சகர புத்திரர்களின் சாம்பல் குவியலை கங்கையின் பிரவாகத்தால் புனிதப்படுத்தி, அவர்கள் ஆத்மா சாந்தியடைந்து மோட்சமடைவார்கள் என்றும் வரம் கொடுத்து ஆசீர்வதித்தார்.

தற்காலத்தில் கபிலர் தவம் செய்த கபிலாரண்யம் அமெரிக்காவில் கலிபோர்னியா என்றும், யாகக் குதிரை கட்டப்பட்டிருந்த இடம் ஹார்ஸ் ஐலண்டு எனவும், சகர புத்திரர்களின் சாம்பல் குவியல் இருந்த இடம் ஆஷ் ஐலண்டு எனவும் மக்களால் இன்றளவும் கருதப்படுகிறது.

பகீரதன் கங்கையை நோக்கி ஆயிரம் ஆண்டுகள் கடும் தவம் செய்தார். கங்கையும் மிக அதிக வேகத்துடன் ஆக்ரோஷமாக ஆகாயத்தில் இருந்து புறப்பட்டு பூமியை நோக்கி சீறிப் பாய்ந்தாள். அதனால் பூமியே வெள்ளக் காடாகி சேதமடைந்துவிடும் என்பதால் ஜன்னு மகரிஷி அவளைத் தலையில் பிடித்து வைத்துக் கொண்டு விட்டார். பகீரதன் மீண்டும் தவம் செய்ய, அவர் கங்கையை தன் காதுகளின் வழியே வெளிவிட்டார். அதனால் ஜானவி எனப் பெயர் பெற்றாள்.

சிவபெருமான் ஒருவரால் மட்டுமே தான் பூமியில் விழும்போது தாங்க முடியும் என்பதால் அவரின் அருளைப் பெறுமாறும், அவரைத் தன்னுடன் பாதாள லோகத்திற்கு அழைத்துச் செல்ல விரும்புவதாகவும் பகீரதனிடன் கூறினாள். இதைத் தெரிந்து கொண்டு சிவனார் அவளைத் தன் ஜடாமுடியினுள் அடக்கி வைத்துக் கொண்டார். அனைத்து நதிகளும் பூவுலகின் நலனுக்காகவே உண்டாக்கப்பட்டு ஓடுவதால், அவைகளின் பிரவாகத்தை நெறிப்படுத்தப்படா விட்டால் வெள்ள அபாயம் ஏற்பட்டு நாசமும், நஷ்டமும் கஷ்டமும் ஏற்படும். இதன் மூலம் அனைத்து அதிகாரங்களும் வல்லமைகளும் ஒரு ஒழுங்குமுறைக் குள் சமுதாய நன்மைக்காக வைத்திருக்க வேண்டும் என்று தெரிவிக்கிறார்.

பகீரதன் மறுபடியும் சிவபெருமானை நோக்கி கடும் தவம் செய்ய, சிவனாரும் மகிழ்ந்து, தனது ஜடாமுடியை சற்றே உலுக்கினார். அதிலிருந்து வெளியில் தெறித்து சிதறிய நீரே பூலோக கங்கையாக பிரவாகித்து ஓடியது; பாதாள லோகத்தை அடைந்து சகர புத்திரர்களின் சாம்பல் குவியலைக் கரைத்து, புனிதமாக்கி அவர்களின் ஆத்மாக்கள் மோட்சமடையச் செய்தது.

கங்கை பகீரதனின் முயற்சியால் பூவுலகு வந்தால் பாகீரதி எனவும், பிரும்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளின் பாதக் கமலங்களைக் கழுவி வெளியேறியதாலும் சத்யலோகம், பூலோகம், பாதாள லோகம் ஆகிய மூன்று லோகங்களிலும் ஓடியதாலும் திரிபதகை எனவும் பெயர் பெற்றாள்.



ஒவ்வொரு நிலையிலும் கடும் முயற்சி செய்து பகீரதன் கங்கையை பூவுலகிற்கு கொண்டு வந்ததைப் பகீரதப் பிரயத்தனம் என்று சொல்வார்கள். மிக மிக கஷ்டப்பட்டு, பல சோதனைகளைத் தாண்டி நாம் நம் இலக்கில் வெற்றி அடைவதை 'பகீரதப்பிரயத்தனம்' என்று சொல்வது இதனால் தான்.

சிவனாரின் சிரசில் இருந்து வருவதால் கங்கை சிவபெருமானை அபிஷேகம் செய்கிறாள். அந்த நீர் சிவனாரின் பாதங்கள் வழியாக பூமியில் கங்கையாக ஓடுவதால் அந்நீர் சிவப்பிரசாதமாகிறது.

சிவனாரைக் கணவராக ஏற்றுக் கொண்ட கங்கை காசியில் தெற்கிலிருந்து வடக்கே, சிவபெருமானை நோக்கி ஓடுகிறாள். காசியில் சிவனார் விஸ்வநாதராக கங்கையின் வடக்கில் கோயில் கொண்டுள்ளார்.

இத்தலத்தில், கங்கைக் கரையில், உயிர் பிரியும் நிலையில் உள்ள, தர்ம வழி தவறாத சிவ பக்தர்களின் காதில் சிவனார் 'ஓம் நமசிவாய' அல்லது 'ஓம் மகாதேவாய நம' என்கிற தாரக மந்திரத்தை உச்சரித்து அவர்களை தன்னுடன் இணைத்துக் கொள்கிறார். தாரகம் என்றால் கடத்தல், தாண்டுதல் என்று பொருள். அதாவது பிறவிக் கடலைத் தாண்ட உதவும் மந்திரம் என்று பொருள்.

உலகில் உள்ள அனைத்து நதிகளிலும் கங்கை மட்டும் சிவனாரிடமிருந்து பாய்ந்து வருகிறாள். அதனால் கங்கை நதியே புனிதமானது. (அகஸ்தியர் தென்னாட்டுக்கு வரும்போது தன் கமண்டலத்தில் கங்கை நீரை நிரப்பிக் கொண்டு வந்தார். குடகு

மலையில் அவர் ஜபம் செய்து கொண்டிருக்கும்போது விநாயகர், காக்கை உருவம் கொண்டு கமண்டலத்தை உருட்டி விட்டார். அந்த நீர் காவிரியாகப் பெருக்கெடுத்தது. கங்கையே காவிரியானது; தென்னாட்டிலும் புனிதமானது).

கங்கைக் கரையில் பாவம் செய்தவர்களுக்கு பிராயச்சித்தமே இல்லை.

ராணுவப் பயிற்சி பெற்ற வீரர்கள் படையில் சேரும் முன் கங்கைத் தண்ணீரைத் தொட்டபடியே சத்திய, விசுவாசப் பிரமாணம் செய்கிறார்கள்.

கங்கை, தன்னுடைய புனிதத்தன்மையால், அவளை வணங்குபவர்களைக் காப்பாற்றி நற்கதியை சிவசாயுஜ்யத்தை அளிக்கும் சக்தியாக விளங்குகிறாள்.

சிவனாரின் தலையில், ஜடா முடியில், எப்பொழுதும் இருப்பதால், இவளைப் பார்த்தால், சிவ தரிசனம் செய்ததற்கு ஒப்பாகும்.

ஆகவே, கங்கையே சிவ சின்னங்களில் முக்கியமாக விளங்குகிறது.

சுபம்

திருச்சிற்றம்பலம்

சிவசிதம்பரம்

* * *





இந்நூலாசிரியர் திரு.ஏ.ஆர். இராமசாமி அவர்கள் மத்திய அரசுப் பணியில், இந்திய கணக்குத் துறையில் முதுநிலை கணக்காய்வு அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர்.

பல ஆண்டுகளாக பல அரிய பழங்காலத்திய இந்து சமய நூல்களைச் சேகரித்து அதிலுள்ள சிவச் சின்னங்கள் பற்றிய குறிப்புகளைத் தொகுத்து, சைவ சமய ஆர்வலர்கள் பயனடையும் விதத்தில் எழுதியுள்ளார்.

தமிழ்த்தாத்தா உறவின் முறையில் வந்த இவர் குடும்பத்தினர் சைவத்தில் ஆர்வமுள்ளவர்களாகவும், சிவப் பணிகளாகிய உழவாரப்பணி, சிவநாம கூட்டுப் பிரார்த்தனை மற்றும் நூல்கள் எழுதி வெளியிடுதல் முதலியவற்றிலும் ஈடுபடுகிறார்கள்.

இவர்கள் எழுதிய சைவ சமய விழிப்புணர்வு நூலான 'சோதனைகளை வென்ற சைவம்' என்ற நூல் கனடாவில் வெளியிடப்பட்டு, தமிழர்கள் வாழும் நாடுகளில் எல்லாம் முழுவதும் விநியோகிக்கப்பட்டு பெரும் புகழ்பெற்றது.

இந்நூலில், உலகம் சிவமயம் என்றும், உலக நாடுகள் அனைத்தும் சிவனையே தெரிந்தோ தெரியாமலோ போற்றுகின்றன என்றும் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

பேராசிரியர் முனைவர்

**எஸ்.பன்னீர்செல்வம்**
சைவ சித்தாந்தத் துறைத் தலைவர்
சென்னை பல்கலைக் கழகம்